வீரமா முனிவர் அருளிய

# தேம்பாவணி

[நாட்டுப் படலம், நகரப் படலம்]

உரையுடன்



உரையாசிரியர்:

விருதுநகர் செந்திக்குமார் நாடார் கல்லூரித்
தமிழ்ப் பேராசிரியர்

வித்துவான், ந சேதுரகுநாதன்



கழக வெளியீடு



வீரமா முனிவர் அருளிய

# தேம்பாவணி

[நாட்டுப் படலம், நகரப் படலம்]

உரையுடன்

கழக வெளியீடு : கஉஉ௫

வீரமா முனிவர் அருளிய

# தேம்பாவணி

[நாட்டுப் படலம், நகரப் படலம்]

உரையுடன்



உரையாசிரியர் :

விருதுநகர் செந்திக்குமார் நாடார் கல்லூரித்
தமிழ்ப் பேராசிரியர்

வித்துவான், ந சேதுரகுநாதன்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி–6. சென்னை-1.

1965

# உள்ளுறை



---

# பதிப்புரை

தேம்பாவணி யென்பது கிறித்துவ சமயத்தை நிறுவி யருளிய இயேசுநாதரின் தந்தையாராகிய வளனின் (சூசை யின்) வரலாற்றைக் கற்போருள்ளத்துக்கு ஒரு புத்தமுதாக அமையுமாறு செய்யுளால் காப்பிய நிலையிற் சிறிதும் வேறு படாது இயற்றப்பெற்றதொரு மாண்பு சான்ற நூலாகும்.

சிந்தாமணி, கம்பராமாயணம், திருக்குறள் முதலிய தலைசிறந்த நூல்களில் உள்ள சீரிய கருத்துக்களையும் கற்பனைகளையும் இந்நூலில் பல இடங்களில் காணலாம். இதனால், இந்நூலாசிரியருக்கு அந்த நூல்களில் உள்ள பயிற்சி தெள்ளிதின் விளங்கும். அயல்நாட்டினராகவும் அயல் மொழியினராகவும், பிறசமயத்தினராகவுமிருந்தும் தமிழில் உள்ள காவியங்களையும், இலக்கணங்களையும் ஐயந் திரிபுகளறப் பயின்று தமிழன்னைக்கு ஒரு புத்தணியாக விளங்குமாறு இந்நூலை இயற்றிக் கொடுத்தமைக்காக இந் நூலாசிரியராகிய வீரமா முனிவருக்குத் தமிழகம் என்றும் நன்றிபாராட்டக் கடமைப்பட்டுள்ளது. இவருடைய வர லாற்றையும், மாண்புகளையும் முகவுரையில் காணலாம்.

தேம்பாவணியின் சீரிய சொல்நயமும், பொருள் நயமும், பாநயமும், தொடைநயமும் கற்பவர்க்கு மேலும் மேலும் இன்பம் பயக்கும். இத்தகைய சிறப்பமைந்த இந் நூலின் **நாட்டுப் படலம், நகரப் படலம்** ஆகிய இரண்டு படலங்களைச் சென்னைப் பல்கலைக் கழகத்தார் வித்துவான் இறுதிநிலை வகுப்பிற்குப் பாடமாக வைத்துள்ளனர். அது பாராட்டுதற்குரிய செயலேயாகும்.

மாணவர்களுக்கும் தமிழன்பர்களுக்கும் பயன்படு மாறு தக்கதோர் உரையுடன் வெளியிடலானோம்.

எங்கள் வேண்டுகோளுக்கு இணங்கி இவ்விரு படலங்களுக்கும் உரை எழுதி உதவிய விருதுநகர் செந்திக்குமார நாடார் கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியர் வித்துவான் திரு. ந. சேதுரகுநாதனவர்களுக்கு என்றென்றும் எங்கள் நன்றியும் வாழ்த்தும் உரியவாகும்.

மாணவர்களும் தமிழன்பர்களும் இந்நூலை வாங்கிப் பயின்று பயனடைவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முகவுரை

தமிழ்மொழிக்குப் பலவகையாலும் தொண்டுசெய்தவர் வீரமாமுனிவர். அவர் இயற்றிய தேம்பாவணி என்ற காப்பியம் அவரது புலமைத் திறனையும் தமிழ்மொழியின்பால் அவர் வைத்துள்ள பேரன்பினையும் தெளிவாகக் காட்டும். அந்நூலிலுள்ள நாட்டுப்படலம் நகரப்படலம் ஆகிய இரண்டு படலங்கள் தமிழ் வித்துவான் வகுப்பு மாணவர்க்குப் பாடமாக வைக்கப்பட்டுள்ளன; அவற்றிற்குப் பொழிப்புரை எழுதித் தரவேண்டுமென்று சைவசித்தாந்தக் கழகத்து ஆட்சியாளர் உயர்திரு. வ. சுப்பையாபிள்ளை யவர்கள் கூறினார்கள். தமிழ்மொழி வளர்க்கும் பெருந்தகையாகிய அவர்கள் சொல்லிய வண்ணம் பொழிப்புரை வரைந்தேன். அவர்களுக்கு என் நன்றி உரியது.

## நூலின் போக்கு

சில சொற்றொடர்களும் பொருட் போக்கும் பல்கிப் பயிலாதனவாக ஆங்காங்கே காணப்பட்டுக் கற்போரைத் திகைக்க வைக்குந் தன்மையிலமைந்துள்ளன. அவற்றை அவற்றின் போக்கிற் பொருள் கொண்டு அமைவுபெறுதலும் பெருந் தொண்டு செய்த வீரமா முனிவரைப் பாராட்டுதலும் நாம் அவர்க்குக் காட்டும் நன்றியாகும்.

உயர்வு நவிற்சியணியை ஆங்காங்கே கையாண்டுள்ளார்; காதற் சுவையை விலக்கித் தன்மையணியிலே காப்பியம் செய்திருப்பதும் இவர் மனவியல்பினை நன்கு காட்டும். சில புனைந்துரைகளும் சுவைப் போக்கிற்காக அமைத்துள்ளனர்.

## நூலாசிரியரைப்பற்றிய குறிப்பு

தேம்பாத அணி (வாடாத மாலை) என்றும், தேம்+பா+அணி=தேன் போன்ற பாக்களாலாகிய அணி என்றும் பொருள் தரும் தேம்பாவணி நூலைக் கொன்ஸ்தந்தீன் ஜோஸெப் பெஸ்கி (Constantine Joseph Beschi) என்ற வீரமா முனிவர் 1729-இல் இயற்றினர். இவர் இத்தாலிய நாட்டில் வெனீஸ் மாகாணத்தைச் சேர்ந்த காஸ்திக்ளியோனே என்ற ஊரில் 1680 ஆம் ஆண்டு நவம்பர் 8 ஆம் நாளிற் பிறந்தார். இவர் கத்தோலிக்கக் கிறிஸ்தவ சமயப் பணிபுரிய விரும்பி இயேசு சபை (The Society of Jesus) என்ற துறவோர் குழுவைச் சேர்ந்து 1709 ஆம் ஆண்டு குருப்பட்டம் வழங்கப் பெற்ருர். தமிழ் நாட்டிற்கு வந்து சமயப் பணிபுரியும் நோக்கொடு 1711 ஆம் ஆண்டு கோவாத் துறைமுகத்தில் வந்திறங்கி மலையாளக் கரையையும் உள்ளடக்கிப் பரந்துகிடந்த தமிழகம் முழுவதும் அலைந்து திரிந்து பல இடர்களுக்கிடையே 36 ஆண்டுகள் அருந்தொண்டு செய்தார். தமிழ்மொழியைக் கற்றற்கு மிகவும் அவாவிச் சுப்பிரதீபக் கவிராயரிடம் இலக்கிய இலக்கணங்களைக் கற்ருர். தமிழ்க் காப்பியமாகிய கம்பராமாயணம், சீவக சிந்தாமணி முதலிய நூல்களையும் சித்தர்கள் அருளிய மருத்துவ நூல்களையும் தக்கோர் துணைகொண்டு நன்கு அவாவுடன் ஐயம் திரிபுகள் அறப் பயின்ருர். சித்தர்களைப் போல் காவியுடை யணிந்து மரக்கறி யுணவு உண்டு குண்டலம், பூணூல், பாதக்குறடு முதலியன அணிந்து புலித்தோலிலமர்ந்து தமிழ்ச் சித்தராகவே மாறிவிட்டார். சித்தர் மருத்துவ நூல் முறையைக் கையாண்டு கைகண்ட முறைகளைப் போற்றி மருத்துவ நூலும் இயற்றினர். இயேசுநாதரின் தந்தையாகிய சூசைமா முனிவரின் வரலாற்றைப்பற்றி மூன்று காண்டங்க

ளாய் முப்பத்தாறு படலங்களாய் 3615 செய்யுட்களடங்கிய தேம்பாவணிக் காப்பியத்தை யாத்தார்.

## பிற நூல்கள்

அடைக்கலமாலை, அன்னையழுங்க லந்தாதி, கித்தேரி யம்மாள் அம்மானை, கருணம்பரப்பதிகம், திருக்காவலூர்க் கலம்பகம், வேத விளக்கம், வேதியர் ஒழுக்கம், பேதகம் மறுத்தல், ஞானம் உணர்த்துதல், தொன்னூல் விளக்கம், சதுரகராதி, தமிழ் இலத்தின் அகராதி, போர்த்துக்கீசிய தமிழ்லத்தின் அகராதி, திருக்குறள் அறத்துப்பால் பொருட்பால் இலத்தின் மொழிபெயர்ப்பு ஆகிய இவைகள்

இலக்கணம், பெருங்காப்பியம், சிற்றிலக்கியம், உரை நடை, அகராதி, மொழிபெயர்ப்பு, சித்த மருத்துவம் ஆகிய எல்லா வகையிலும் பெருந் தொண்டு செய்த வீரமா முனிவரின் பெரும்புகழ் வியத்தற்குரிய சிறப்புடையது.

## நூற் சுருக்கம்

எருசலேம் நகரைத் தலைநகராகக் கொண்ட யூதேயா நாட்டைத் தாவீது மன்னன் ஆண்டான். அம் மரபில் தோன்றிய சகோபு (யாக்கோபு) என்பவனுக்கும் நீப்பி என்பவளுக்கும் மகனாகச் சூசை என்பவன் தோன்றினான். அவனே தேம்பாவணி நூலில் வளன் என்று கூறப் பெறுவான். அவன் கடவுளன்பிற் றிளைத்துச் சிற்றின்ப வாழ்வை வெறுத்துத் துறவுபூண்டு வனத்தில் வாழ்ந் தான். அவன் முன் வானவன் ஒருவன் தோன்றி, "இல்லறத்தையும் துறவறத்தையும் இணைத்து நாட்டி லிருந்து மக்களுக்கு நல்வழி காட்டுதலாகிய தவமே தன்னலங் கருதாத அன்பறம்" என்று வளனுக்கு எடுத் துரைத்தான். அதனால் மனந்தெளிந்த வளன் நாட்டிற்குட்

போய் மாசற்ற தூய நன்மன வாழ்வு மேற்கொண்டிருந்தான். "விலக்கிய கனியை உண்டதனால் விளைந்த பாவத்தைப் போக்கி உலகமக்களை மீட்கும் வண்ணம் இறைவன் இவ்வுலகில் தோன்ற வேண்டும்;" என்று வளன் தவம் புரிந்தான்.

இறைவன் தோன்றுதற்குரிய காலமும் வந்தது; மூன்று வயது முதலே கோயில் வழிபாட்டிலும் தொண்டிலும் ஈடுபட்டு என்றும் கன்னியாய் வாழும் நோன்பு பூண்டு ஆண்டவனின் தோற்றத்தை விருப்புடன் மரியாள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். வானவன் ஒருவன் அவள் முன் தோன்றி அவள் மணம் புரிந்து வாழ்தலே இறைவன் திருவுளம் என்று மொழிந்தான். அவள் அதனால் தன் கன்னிமை நோன்புக்குப் பழுது வருமென அஞ்சினாள்; அதற்குப் பழுது வராது காக்க இறைவன் திருவுளம் பற்றியுளான் என்று கூறவே மரியாளும் இசைந்தாள்.

கோவிலின் தலைமைக் குருவாகிய சிமையோனுக்கு ஆண்டவன் தோன்றி மரியாளுக்குத் தாவீதின் மரபில் தக்க துணைவனைத் தேடி மணம் முடித்துவைக்கக் கட்டளையிட்டான். தாவீதின் மரபினர் யாவரும் கோவிலில் வந்து கூடினர். திருமணத்திற்கு விருப்பமின்றியே வானவன் கட்டளைக்கு அஞ்சி வளனும் வந்திருந்தான். தோழியர் கன்னி மரியாளை அழைத்து வந்து திருக்கோவிலின் முன்பு நிறுத்தினர். தக்க தலைவனைத் தேர்ந்தெடுக்குங் கருத்துடன் மணத்திற்கு உரிய ஆடவர் அனைவர் கையிலும் ஒவ்வொரு கோல் கொடுத்தனர். வளனின் கையிலிருந்த கோல் உடனே வெண்மலர் பூத்து நன்மணம் பரப்பிற்று. 33 வயதுள்ள வளனுக்கும் 14 வயதுள்ள மரியம்மாளுக்கும் திருமணம் நடந்தது. இருவரும் நாசரேத்தூரை யடைந்தனர்.

இவர்கள் தம் உள்ளக் கருத்தை இனிய முறையில் ஒருவருக் கொருவர் அறிவித்துப் புறத்தோற்றத்திற்கு இல்லறம் போன்றும் அகத்தில் துறவறமேயா இணை யற்ற வாழ்வு மேற்கொண்டனர். ஏழு மாதம் கழித்து கபீரியேல் என்ற வானவன் கன்னி மரியம்மாளை அணுகி இறைவனைக் கருத்தாங்கி மகவாகப் பெற்று இயேசு என்னும் பெயர் சூட்டுவாய் என்று வாழ்த்தினன். தன் கன்னிமைக்குப் பழுது நேருமே என்று அஞ்சிய அம்மையை வானவன் தேற்றி அவள் உறவினளான எலிசபேத் தன் முதுமையிலே இறையருளால் கருவுற்று ஆறு திங்களா யமையைத் தெரிவித்தாள். ஆண்டவன் அடிமை யான் என்று மரியாள் வணங்கினாள். அக்கணமே ஆடவன் துணையின்றி ஆண்டவன் அருளால் ஆண்டவனை அன்ன மரியம்மாள் கருக்கொண்டாள். அவளுக்கு 5 ஆம் திங்கள் முதலே தோன்றிய ஐயம் ஏழாம் திங்களில் உறுதிய ாறு. மரியம்மாள் மேல் பழிசுமத்த மனமின்றி இரவில் அவளை விடுத்து விலக வளன் உளங் கொண்டான். வானவன் கபீரியேல் வளன் கனவில் வந்து உண்மையை உணர்த்தினன். ஈரறத் தலைவர் இருவரும் இறைவனை போற்றி இறைவன் தோன்றும் நன்னாளை எதிர் நோக்கினர். உரோமை மன்னன் ஒத்தவியான தனது ஆட்சிக்கு உட்பட்ட மக்களைக் கணக்கெடுக்க நினைத்து ஒவ்வொரு வரும் தம் ஊருக்குப் போய்க் கணக்குக் கொடுத்துக் காணிக்கை செலுத்த வேண்டுமெனக் கட்டளையிட்டான். கருப்பம் நிறைந்திருந்த கன்னி மரியாளுடன் வளன் தன் ஊராகிய பெத்திலெமுக்குப் போய்க் கடமையை முடித்துக் கொண்டு எங்கும் தங்க இடமின்மையால் ஆடுமாடுகள் தங்கும் குகையொன்றில் தங்கினன். மார்கழி 25 ஆம் நாள் நள்ளிரவு கழிந்து தோன்றிய ஞாயிற்றுக் கிழமையில்

தேவகுமாரன் மரியம்மாளிடம் நோவின்றிப் பிறந்தான். வானவர் வந்து வாழ்த்தினர்; ஆயர்கள் வந்து வணங்கினர். 8 ஆம் நாள் பெற்றோர்கள் வேதியரைக் கொண்டு குழந்தைக்கு இயேசு என்று பெயர் சூட்டினர்.

திருக்குமரன் அவதாரத்தின்போது தோன்றிய புதிய நட்சத்திரம் வழிகாட்ட மூவேந்தர்கள் வந்து குழந்தையை வணங்கிக் காணிக்கை செலுத்தி ஆசி பெற்று மீண்டனர். யூதர் வழக்கப்படி 40 ஆம் நாளில் காணிக்கை செலுத்தும் பொருட்டுப் பெற்றோர் எருசலேம் ஆலயத்தை அடைந்தனர். அப்போது சிமையோன் குழந்தையைக் கையிலேந்திப் பார்த்து அம் மகனுக்குப் பின்பு நிகழக் கூடிய நலந்தீங்குகளைத் திருவருளால் அறிந்து கூறினான். மூவேந்தர் வருகையால் யூதருக்கு ஒரு மன்னன் பிறந்த செய்தி தெரிந்து அவர்கள் திரும்பி வராமையால் அக் குழந்தை இன்னான் என்று அறிந்து கொள்ள இயலாத ஏரோது மன்னன் அவ்வயதுக்குட்பட்ட ஆண் குழந்தைகளை யெல்லாம் கொல்லத் திட்ட மிட்டான். அதனைக் கனவில் வானவனால் முன்பேயறிந்த வளன் குழந்தையையும் தாயையும் அழைத்துக் கொண்டு எசித்து நாட்டை யடைந்தான். தேவ குமாரன் வருகையால் நிலைகுலைந்த பேய்கள் ஒன்றாகக் கூடிவந்து அம் மூவரையும் அழிக்க முற்பட்டன. வளனும் மரியம்மாளும் புரிந்த தவக்கோட்டையைத் தாண்டிவர அப்பேய்களுக்கு முடியவில்லை. குழந்தை நாதன் வளனை அப்பா என்றழைத்த இனிய குரலால் அவையெல்லாம் ஒன்று கூடத் தப்பாமல் சென்று நரக நெருப்பிலாழ்ந்து நொந்தன. ஏரோது செய்த கொடுமையால் மாண்ட குழந்தைகளையெல்லாம் காட்சியிற் கண்டு வளனும் மரியம்மாளும் வருந்தி அவை வான் வீட்டுரிமை பெற்று இன்புற்றமையால் ஆறுதலடைந்தனர்.

வளன் எகித்து நாட்டிலே குழந்தை நாதனருளால் வேத விளக்கேற்றி மக்களை நல்வழிப் படுத்தினன். ஏழாண்டுகட்குப் பின்பு வானவன் ஒருவன் தோன்றி ஏரோது இறந்தானென்பது கூறி மரியம்மாளையும் குழந்தையையும் அழைத்துக் கொண்டு தன்னூட்டுக்குப் போகும்படி வளனிடம் சொன்னன். நாசரேத்தூரில் ஒரு சிறு வீட்டில் இந்தத் திருக்குடும்பம் தங்கியது. ஒருநாள் மூவரும் எருசலேம் ஆலயத்திற்குப் போயினர். கூட்டத்தில் மூவரும் பிரியவேண்டியதாயிற்று. மகளிரோடு மரியம்மாளும் ஆடவரோடு வளனும் பிரிந்து ஊர் செல்லும் வழியில் இருவரும் ஓரிடத்தில் சந்தித்து மகனைக் காணமையால் மீண்டும் ஆலயம் சென்று மூன்று நாள் தேடியலைந்து முடிவில் வேதநூ லறிஞருடன் தருக்கம் புரிந்து கொண்டிருந்த மகனைக் கண்டு மகிழ்ந்தனர். அவர்கள் நாசரேத்திற் சென்று வாழ்ந்தனர். வளனுக்கு வயது 52 ஆயிற்று. அவன் பல நோய்களைப் பொறுமையுடன் தாங்கினன். மரியம்மாளும் தேவ குமாரனும் தம் பணிவிடைகளால் நோய்க் கொடுமையை மாற்ற முயன்றும் மாருமல்போகவே உயிர் பிரியும் நேரம் வந்தது. இருவரையும் பிரிய வளன் வருந்தினன். மரியம்மாளும் திருமகனும் அவனுக்கு வாழ்த்துக் கூறினர். வளனின் இனிய உயிர் உடலை விட்டுப் பிரிந்து மோட்சம் பெறுதற்குத் தேவகுமாரனின் திருப்பாடுகளை எதிர்நோக்கி இருந்த புண்ணியவாளர் இருப்பிடம் சென்று சேர்ந்தது. தேவகுமாரன் பிறந்த செய்தி முதலியவற்றை வளன் விரித்துரைத்தான். ஏழாண்டு கழித்துத் தேவகுமாரன் தன் தாயங்களோடு அப் புண்ணியவாளரை வந்தடைந்தான். அவன் விரித்துக் கூறிய பாடுகளின் கொடுமையையும் மரணத்தையும் கேட்டு அவர்கள் மிகவும் வருத்தமடைந்தனர். மூன்றும் நாள்

தேவகுமாரன் உடலோடு உயிர்த்தெழுந்து வளனையும் உடலோடு உயிர்ப்பித்தான்.

தேவகுமாரன் வளனையும் அழைத்து வந்து மரியம் மாள் முன்பு நின்றான். அன்னை இருவரையும் வணங்கி ஆறுதலும் ஆனந்தமும் ஒருங்கே கொண்டாள். நாற்பது நாட்கள் உலகில் தங்கிய பின்பு மரியம்மாளைத் தேற்றி மற்றைய புண்ணியவாளர்கள் புடைசூழத் தேவகுமாரனும் வளனும் தங்களுடலோடு வானுலக மேறினர். பாவத்தால் மூடிக்கிடந்த வான் வீடு திறந்தது. தேவ குமாரன் பிதாவை யணுகி இவ்வுலகில் தன்னை நிழல்போல் காத்த வளனை மக்களுக்கு மன்னனாக்கி முடி சூட்டுமாறு வேண்டினான். வளன் மூவராய் ஒருவனாய் விளங்கும் முழுமுதற் கடவுளை வணங்கினான். ஆண்டவன் அவனுக்கு மணிமுடி சூட்டித் தன் பக்கத்தே வீற்றிருக்கும் பேறு நல்கிப் போற்றினான். இவையே தேம்பாவணி நூலின் சுருக்கம். இந் நூற்பகுதிக்கு யான் உரை எழுதக் காரணராக இருந்த உயர்திரு வ. சு. அவர்கட்கும் பழைய பதிப்பு நூல் தந்து உதவிய உயர்திரு வி. மரியந்தோனி எம். ஏ. அவர்கட்கும் என் நன்றி உரியது.

இங்ஙனம்

ந. சேதுரகுநாதன்

# தேம்பாவணி

## மூலமும் உரையும்



### பாயிரம்

சீரிய உலக மூன்றும்
        செய்தளித் தழிப்ப வல்லாய்
நேரிய எதிரோப் பின்றி
        நீத்தஓர் கடவுள் தூய
வேரிய கமல பாதம்
        வினையறப் பணிந்து போற்றி
ஆரிய வளன்தன் காதை
        அறமுதல் விளங்கச் சொல்வாம்.

(பொ-ரை.) சிறந்த உலகம் மூன்றினையும் படைத்துக் காத்து அழிக்கவல்லாய்! நேரிய! எதிரும் ஒப்பும் இன்றி ஓங்கிய ஒப்பற்ற கடவுளே! நின் தூய மணமுள்ள தாமரை மலர்போன்ற திருவடிகளைத் தீவினை நீங்க வணங்கி வாழ்த்தி ஆரியனாகிய வளனுடைய கதையை அறம் முதலிய நாற்பொருளும் விளங்கச் சொல்வோம் எ - று.

கடவுள்: அண்மைவிளி. வல்லாய், நேரிய என்பனவும் விளி வேற்றுமை. ஓர் கடவுள் என்பதற்கு ஒரு கடவுள் எனினுமாம். ஆரிய இனம் போன்ற இனம் என்பது குறித்தற்கு ஆரிய வளன் என்றார்.

தேவுல கிறைஞ்சும் சூசை
தேன்மலர்க் கோடியைப் பூத்து
மூவுல கனைத்தும் எஞ்சா
முறையோடு நிழற்றும் நாதன்.
பூவுல கெய்தி அன்ன
பூநிழற் கொதுங்கிச் சாய்ந்த
யாவுல கனைத்தும் வாழ்த்தும்
இருங்கதை இயம்பல் செய்வாம்.

(பொ - ரை.) வானோர் வணங்கும் சூசை மாமுனி தேன்மலர்க்கொடியை அடைய மூவுலகனைத்துங் குறையாத நெறிமுறையோடு நிழலைச் செய்யும் கிறிஸ்து நாதரும் பூவுலகுக்கு வந்து அந்தப் பூங்கொடியின் நிழலில் ஒதுங்கிச் சாய்ந்தாராக உலகு அனைத்தும் வாழ்த்தும் பெரிய கதையை இயம்புவோமாக எ - று.

சூசையின் கையிற்கொடுத்த வெண்கோல் பசுங்கோலாய் மலர் பூத்தமை குறிப்பிட்டார்.

தேன் பேரின்பத்தையும் மலர்க்கொடி அருளையும் குறிக்கும்.

எஞ்சா - குறையாத. எய்தி - வந்து. ஒதுங்கி - மனமடங்கி. சாய்ந்த - சேர்ந்த.

சூசையும் நாதனும் பூவுலகெய்த அந்தப் பூநிழலில் ஒதுங்கிச் சாய்ந்த உலகனைத்தும் வாழ்த்தும் கதை என்றும் பொருள் கூறலாம். (உ)

வளம்செயும் வரங்கள் தம்மால்
வரைவில வளர்வ மைந்த
உளம்செயும் அரிய மாட்சி
உடையவன் ஆய தன்மை
நளம்செயும் வடநூ லோர்கள்
நவின்றிவன் சூசை என்ப
தளம்செயும் தமிழ்ச்சொல் லானும்
அவன்வளன் என்ப தோத்தே.

(பொ - ரை.) வளத்தை யாக்குகின்ற வரங்களைப் பெற்றுடைமையால், அளவிடற்கரிய வளர்ச்சி அமையப் பெற்ற, உள்ளத்தால் நினைப்பரிய மாட்சிமை உடையவன் ஆகிய தன்மையை விருப்பஞ்செய்யும் விவிலிய நூலோர்களால் நவிலப்பெற்ற 'இவன் சூசை' என்பதை ஒத்ததே அளவியல் செய்யும் தமிழ்ச் சொல்லான் அவன் வளன் என்று சொல்வதும் எ - று.

சூசை என்ற சொல்லுக்குப் பொருள் 'வளன்' என்பது. வளம்-அசலம் எனலுமாம். அளம் - கூர்மை எனினுமாம். (௯)

அவையடக்கம்

சூசையுற் றனவ ரங்கள்
தூய்கடல் கடக்கல் இல்லா
ஓசையுற் றொழுக மிர்தம்
உடைகட லென்ன நண்ணிப்
பூசையுற் றதனை நக்கப்
புக்கென உளத்தைத் தூண்டும்
ஆசையுற் றூம னேனும்
அருங்கதை அறையல் உற்றேன்.

(பொ - ரை.) சூசை அடைந்த வரங்கள் எவராலும் கடத்தற்கரிய தூய அமிழ்தக் கடலாக, அதிலிருந்து உடைகடல் போல ஓசைமிக்கு ஒழுகுகின்ற அமிழ்தத்தை ஒரு பூனை அணுகி நக்கத் தொடங்குவது போல என் உள்ளத்தைத் தூண்டுகின்ற ஆசை மிகுதலால் ஊமனேனாகிய யானும் அந்த அரிய கதையை அறையத் தொடங்கினேன் எ - று.

கடக்கல் இல்லா அமிழ்தக்கடல் என்று கூட்டுக. நண்ணி - அணுகி. புக்கென - தொடங்கியது போல. பூசை - பூனை.

"ஓசை யுற்றுயர் பாற்கடல் புக்கொரு
பூசை முற்றவும் நக்குபு புக்கென
ஆசை பற்றி அறையலுற் றேன்மற்றக்
காசில் கொற்றத் திராமன் கதையரோ"

என்றார் கம்பர். பூசையுற்று என்பதற்கு வணக்கம் செய்து என்று உரை கூறினாருமுளர். (௭)

முறையடுத் தருநூ லோர்உள்
மூழ்கிய உவப்பில் அன்ன
துறையடுத் தள்ளி உண்ணும்
துணிவிலான் என்னை நோக்கிக்
குறையெடுத் தனைஎன் றன்னார்
கொடுஞ்சினத் துறுக்கல் நன்றே
பறையெடுத் துலகம் கேட்பப்
பழித்தேனை நகைத்தல் நன்றே.

(பொ-ரை.) கவிகளை ஆராயும் முறைமையை யடுத்து அரிய நூலாசிரியர்கள் ஆழ்ந்து நுணுகிச்சென்ற உவகை நெறியில், அத்தன்மையாகிய துறைகளை அடுத்துக் கரையில் நின்று அள்ளி உண்ணுகிற, துணிவில்லாதவனாகிய என்னைப் புலவர்கள் நோக்கி, நீ குறைசெய்தாய் என்று கொடுஞ் சினங்கொண்டு அதட்டுதல் நல்ல செயலாமோ? உலகம் கேட்பப் பறையறைந்து என்னைப் பழித்து நகைத்தலும் நற்செயலாமோ? ஆகாது எ-று.

"அறையும் ஆடரங் கும்மடப் பிள்ளைகள்
தறையிற் கீறிடிற் றச்சரும் காய்வரோ
இறையும் ஞானமி லாதவென் புன்கவி
முறையின் நூலுணர்ந் தாரும் முனிவரோ." (கம்பர்)

கவிதைக் கடலில் மூழ்கி ஆராயும் புலவர்களின் செயலைச் செய்யாமல் கரையில் நின்று அள்ளி உண்ணுகின்ற என்னைக் குறைசொல்லுதலும் பழித்து நகைத்தலும் ஆகாது என்று அவை யடக்கம் கூறினார். (௮)

வண்டமிழ் இனிதிற் கேட்ட
மடக்கிளி கிளக்கும் புன்சொல்
கொண்டமிழ்ந் துரைப்ப நூலோர்
குறையெனக் கேளார் கொல்லோ

உண்டமிழ் துமிழ்ந்தா லென்ன
உலகோருங் காள்வாள் சொன்ன
பண்டமிழ் துண்டி யான்புன்
பாவோடு கக்கக் கேட்பார்.

(பொ - ரை.) வண்மையான தமிழை இனிதாகக் கேட்ட அறிவில்லாத கிளி, அத் தமிழைத் தான் பேசும் புல்லிய சொற்கொண்டு முறைபிறழக் கூற, நூலறி புலவர் அதனைக் குறையென்று நினைத்துக் கேட்கமாட்டாரோ? கேட்பர்; அதுபோல், உலகினை ஒருசேர ஆள்பவளாகிய கன்னி மரியாள் அமிழ்தத்தை உட்கொண்டு அமிழ்த மாகவே உமிழ்ந்தாற்போற் கூறிய பழைய அமிழ்தத்தை உட்கொண்டு யான் புல்லிய பாடலால் கூற இதனை நூலறி புலவர் கேளார்கொல்லோ? கேட்பார் எ - று.

குறிப்பு: கிளி தனக்கு உரிய மொழியல்லாத மொழியை இனிதாகக் கேட்டுப் பின் தன் தகைமைக்கேற்பத் தன் புன் மொழியால் அத் தமிழினை முறை பிறழ்ந்து உரைத்தாலும் அதனையும் நூலறிபுலவர் உவகையொடு கேட்பர். அதுபோல் எனக்கு உரிய மொழியல்லாத தமிழ்மொழியை யான் கற்றுக் கன்னி மரியாள் கூறிய அமிழ்தமொழியை என் தகுதிக்கேற்ப இயற்றும் புன்பாவால் கூற அதனைக் கேட்பவரும் இகழாது கேட்பர் என்று அவையடக்கம் கூறினர்.

கிளியின் மொழியை இகழாதவாறுபோல் என் மொழியையும் இகழாது அதில் உள்ள பொருள் நோக்கிக் கொள்வர் என்பது கருத்து. 'பிறர்சொற் பயன்கோடல் மாட்சியின் மாசற்றார் கோள்' என்பது பொய்யாமொழி யன்றோ?

கொல்: அசை. ஓகாரம்: எதிர்மறை. (௬)

## நூல் வந்த வழி

அடவியால் வனப்பில் வாய்ந்த
ஆகிர்த எனும்ந கர்க்குள்
புடவியால் உவமை நீத்த
புகழ்வரத் துயர்ந்த கன்னி

நடவியார் தவத்தில் ஓங்கி
நாதனை ஈன்றுள் தாளைத்
தடவியார் வுயரப் போற்றித்
தகவடைந் திருந்தாள் அன்றே.

(பொ - ரை.) உலகில் உவமையில்லாத, யாவரும் புகழ்கின்ற வரத்தால் உயர்ந்த, கன்னியாகிய ஆகிர்த மரியாள், பொழில் வளத்தால் அழகினால் மேம்பட்ட ஆகிர்தம் என்கின்ற நகரத்தில், நிறைந்த தவத்தால் சிறப் புற்று நடந்து கிறிஸ்துநாதரை ஈன்ற கன்னி மரியாளின் திருவடிகளைக் கைகளால் வருடி ஆர்வம் நிரம்பப் போற்றி (வாழ்த்தி)த் தகுதியடைந்து இருந்தாள் எ - று.

அன்று ஒ என்பன அசை நிலைகள். புடவி - உலகம். ஆல்: வேற்றுமை மயக்கம். நடவி என்பது நடந்து என்ற வினை யெச்சப் பொருள் தராதெனினும் பிறமொழியாளர் எழுதினமை யின் விதிவிலக்காகக் கொள்க. இங்ஙனம் புதியனவாய் இவர் படைத்துக்கொண்ட சொற்களுக்கும் இவ்விலக்குக் கொள்க.

தேவமாதாவாகிய கன்னி மரியாள் ஆகிர்த நகரத்தில் தோன்றிய ஆகிர்த மரியாள் என்ற கன்னிப் பெண்ணுக்கு வளன் வரலாறு உரைத்தருள அதனை அவள் எழுதினாள் என்பது உணர்க. (எ)

பொறையுழி சிறப்பில் வாய்ந்த
புலன்தவிர் காட்சி தன்னால்
அறைமொழி இனிமை கான்ற
அருள்அவிழ் வாயி னாளே
நிறைமொழி மாந்தர் பூத்த
நீர்மையோ டொழுகல் செய்து
மறைமொழி வாய்மை காட்டும்
மாண்புடை அறத்தி னாளே.

(பொ - ரை.) பொறுமையுள்ள இடத்துச் சிறப்பொடு தோன்றி மேலோங்குகின்ற, ஐயுணர்வையுங் கடந்த மெய் யுணர்வு உடைமையால், சொல்லுகின்ற சொற்கள் இனிமை

தோன்றுதற்குக் காரணமான அருளைப் பொழிகின்ற வாயினளாகிய அவள் (ஆகிர்த மரியாள்) மறைமொழி புணர்ந்த நிறைமொழி மாந்தராகிய முனிவரிடம் தோன்றிய நற்பண்புகளோடு ஒழுகித் தானும் மறைமொழியின் வாய்மையை உலகிற்குத் தோன்றச்செய்யும் மாண்புமிக்க அறத்தினளும் ஆயினள் எ - று.

பொறையுழி - பொறுமையுள்ள இடத்து. பொறையையுடைய இடம் என்று கொண்டு உலகில் என்று உரைத்தலுமாம்.

"ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்புணர் வில்லா தவர்க்கு." —குறள். ௩௫௪. (அ)

சீதருள் உடுக்கள் ஊடு
திங்களைப் போலக் கன்னி
மாதருள் அரிய மாண்பால்
வயங்கினள் அன்றித் தன்னில்
கோதருள் குறையற் றும்பர்க்
குழுவினுக் கேந்தை அண்டம்
மீதருள் காட்சி பூத்து
வேதியர்க் கொளியே போன்றாள்.

(பொ - ரை.) தண்மை பரப்புகின்ற விண்மீன்களின் நடுவில் வெண்ணிலவு தோன்றி விளங்குவது போல ஆகிர்த கன்னியும் மாதர்களுள் அரிய மாட்சிமையொடு விளங்கினள்; அதுவுமன்றித் தன்பால் குற்றமுண்டாக்குகின்ற குறைபாடும் இன்றி, வானோர் கூட்டத்திற்கு இறைவன் மேலுலகத்தில் அருள்கின்ற மெய்யுணர்வு போன்ற உணர்வு தோன்றப்பெற்று வேதியர்க்கு ஒளி போன்றும் விளங்கினள் எ - று.

சீதம் என்பது சீத என்று குறைந்து நின்று அருள் என்ற சொல்லொடு புணர்ந்தது; கடைக்குறை. குளிர்ச்சி என்பது பொருள். உடுக்கள் - விண்மீன்கள். கோது - குற்றம். விண் மீன்களினிடையே வெண்மதி சிறப்புற்று விளங்குதல்போல் காரிகையாரிடையே கன்னி மாண்புடன் விளங்கினள் என்க. (௯)

இளங்கொடி மாட்சி காட்ட
இனியதன் நாமம் தந்து
வளங்கொடு நட்புக் காட்ட
வரைவில வரங்கள் ஈந்தாள்
விளங்கொளி உடுத்த மேனி
வெண்மதி மிதித்த பாதம்
உளங்குடு சூட்டும் சென்னி
உடையவள் பரம தாயே.

(பொ - ரை.) இளமையான பூங்கொடி போன்ற ஆகிர்த மரியாளின் மேற்கூறிய மாண்புகளைக் காட்டுவதற்குத் தேவமாதாவாகிய கன்னிமரியாள் இனிய தனது பெயரைக் கொடுத்து, வளத்தால் நட்புக்காட்ட அளவில்லாதனவாகிய வரங்களையும் அருளினாள். விளங்குகின்ற கதிரவன் ஒளி சூழ்ந்த திருமேனியையும், வெண்மதியின்மேல் வைத்த திருவடிகளையும் வட்ட வரம்பொழுங்காக அமைந்த விண்மீன்கள் சூட்டப்பெற்ற திருமுடியையும் உடையவளாகிய பரமதேவதாயே. பரமதாய் இளங்கொடி மாட்சி காட்ட நாமம் தந்து நட்புக் காட்ட வரங்களும் ஈந்தாள் என்க எ - று. (கo)

இன்னவை மகளும் தாயும்
இணையென நடத்தும் வேளை
பன்னவை அறும்தன் பூமான்
பழங்கதை உரைத்து ரைத்த
அன்னவை எவரும் கேட்ப
அவைவரை கேன்றாள் தாயும்
சொன்னவை மகளும் அன்ன
துணிவொடு வரைந்திட் டாளே.

(பொ - ரை.) இத்தன்மையாகிய வரலாற்றைத் தாயும் மகளும் போலக் கன்னி மரியாளும் ஆகிர்த மரியாளும் நடத்தும்போது கற்பவர், கேட்பவர்களின் பல குற்றங்களும்

நீங்குதற்குக் காரணமாகிய தன் தலைவனின் பழமையான வரலாற்றை உரைத்து அவற்றை யாவரும் கற்றுக் கேட்டு உணரும் வண்ணம் வரைக என்றாள் தாயாகிய மரியாள்; மகளாகிய ஆகிர்த மரியாளும் அந்தத் துணிவுடன் வரைந்தாள் என்க. (கக)

வருந்திய நசையால் நானும்
வரைந்தவை வரைந்து காட்டத்
திருந்திய தமிழ்ச்சொல் இல்லால்
செவிப்புலன் கைப்ப நல்லோர்
பொருந்திய குறைகள் நோக்கில்
புணர்ந்தமட் கலத்தைப் பாரா
தருந்திய அமுது நன்றேல்
அருத்தியோ டருந்தல் செய்வார்.

(பொ-ரை.) இயற்றவேண்டுமென்று எழுந்த விருப்பத்தினால் வருந்திய நானும் அந்த ஆகிர்த மரியாள் வரைந்த வரலாற்றை வரைந்துகாட்ட என்பால் திருந்திய தமிழ்ச் சொல்லில்லை ஆதலால் நல்லோர் செவிப்புலன் கைக்கும்படி யான் இயற்றிய பாக்களில் பொருந்தியுள்ள குறைகளை நோக்கின் அமிழ்தத்தை ஏந்தியுள்ள மட்கலத்தைப் பாராராய் அருந்துதற்குரிய அவ்வமிழ்தம் நன்றானால் விருப்பத்தோடு அருந்துவர்; அதுபோல் நூலிலமைந்த பொருள் நயம் நோக்கிப் போற்றுவர் என்பது கருத்து. (கஉ)

சீரிய மறைநூல் பூண்ட
செழுந்தவத் தரிய மாட்சி
நேரிய உளத்தில் ஓங்கி
நேமிகாத் தவனைக் காத்த
வேரியம் கோடியோன் காதை
விளம்பஅக் கோடிவிள் பைம்பூ
ஆரிய னூரில் தேம்பா
அணியெனப் பிணித்தல் செய்வாம்.

(பொ - ரை.) சிறந்த வேதநூலை மேற்கொண்ட செழுமையான தவத்தின் அரிய மாட்சிமையோடு கூடிய நேரிய உள்ளத்தால் மேம்பட்டு உலகங் காத்த கிறிஸ்து நாதரைக் கைத்தாதையாகக் காத்தோம்பி மணங்கமழும் கொடியை யுயர்த்த சூசையின் வரலாற்றைச் சொல்ல அந்தப் பூங்கொடி விண்ட நன்மலரைக் கொண்டு ஆரிய ஞாரில் தேம்பாவணி யென்ற பெயரால் நூலியாத்தல் செய்வாம்.

பாயிரம் முற்றிற்று.

---

## ௨. நாட்டுப் படலம்

### நீர்வளம்

#### முகிலின் தோற்றம்

புள்ளு லாம்விசும் பிடைதொறும்
பொரும்படை பொருவ
வெள்ளு லாமழை வெண்கொடி
யுருக்கோடு விளங்கித்
தெள்ளு லாந்திரை திளைப்பவுண்
டெழுந்துயர் பரந்து
வள்ளு லாங்கரு மதகரி
இனமெனத் தோன்ற.

(கருத்துரை) பறவையுலாவும் விசும்பில் மேகம் படை போற் பரவிச் சென்று கடல் நீருண்டு கருத்து மதயானைத் திரள் போல் மீண்டு வந்தன.

(பொ-ரை.) பறவைகள் உலாவுகின்ற வானவெளியில், இடங்கள்தோறும் போர்ப்படைகளைப்போல வெண்மையாக உலாவுகின்ற முகிற்கூட்டங்கள், வெள்ளைக்கொடிகளின் வடிவத்தோடு தோன்றித், தெள்ளிய உலாவுகின்ற நீரை நிறைய வுண்டு எழுந்து உயர்ந்து பரந்து வளமாக உலாவுகின்ற கருமையான மதயானைக் கூட்டங்கள்போல் தோன்ற.

உலாம் - உலாவும். திரை - நீர்: ஆகுபெயர். (௬)

#### மின்னலும் முகில் முழக்கமும்

போர்பு றங்கோடு பொருந்தல
ருரத்திற்றேய்த் தொளிர்வேல்
சீர்பு றங்கோடு திசைதொறு
மிருளற மின்னி

வார்பு றங்கோடு வளர்முர
சோலியென வதிர்ந்து
நீர்பு றங்கோடு நீன்முகில்
முழங்கின மாதோ.

(க - ரை.) முகிலினம் முரசினம் போல முழங்கின. வேலினம் போல மின்னின.

(பொ - ரை.) போரை மேற்கொண்டு பகைவரின் மார்பில் தீட்டப்பட்டு ஒளிர்கின்ற வேற்படைகளின் சீரை மேற்கொண்டு திசைகள்தோறும் இருளற மின்னி வாரால் சூழப்பட்டு மிக்கு ஒலிக்கின்ற முரசுகளின் ஒலிபோல நீரைக் கொண்ட நீலமுகிலின் கூட்டங்கள் மிக முழங்கின எ-று.

புறம் என்பது ஐகார உருபின் பொருள் தந்து நின்றது. மாதோ : அசை. (உ)

மழை பொழிதல்

படையே னச்சேருப் பகைதரப்
படர்ந்தன வல்லாற்
கடையே னச்சேறி கருணையோ
டேஞற்றிய வள்ளற்
கோடையே னச்செழுங் குன்றேடு
வயின்றேறுங் குளிர
மிடையே னச்சோரி வியன்முகில்
வரைவில பொழிய.

(க - து.) படைபோலச் சென்ற முகிலினம் வள்ளல் கொடைபோல மழை பொழிய.

(பொ - ரை.) வேனிலொடு பொருகின்ற போர்ப் பகையை உண்டாக்க, மேகம் படைகள் போன்று சென்றனவேயன்றிப் பின்பு அருளின்றிப் பொருதல் கடையென (நினைத்து)ப் பொருந்திய அருளொடு செய்த வள்ளல்களின் கொடைத்தொழில்போல் செழுமையான மலைகள்தோறும்

இடங்கள்தோறும் குளிரும்படியாக நெருக்கமாகச் சொரி கின்ற பெரிய மேகங்கள் அளவில்லாத மழையைப் பொழிய எ - று.

"உள்ளி யுள்ளவெல் லாமுவந் தீயுமவ்
வள்ளி யோரின் வழங்கின மேகமே." (கம்பர்)

செருப்பகைதர-வேனிலொடு போர்ப்பகையை உண்டாக்க. கடையென - போர் புரிதல் கடையென. வள்ளல் - வள்ளல்கள். மிடை(தல்)-நெருங்குதல். (௩)

அருவி புறப்படுதல்

படித்த நூலவை பயன்பட
விரித்துரைப் பவர்போல்
தடித்த நீள்முகில் தவழ்தலை
பொலிந்தபொன் மலையே
குடித்த நீரெலாங் கொப்புளித்
தமுதென வருவி
யிடித்த ருவொலி யெழத்திரை
யெறிந்துருண் டிரிய.

(க - ரை.) படித்த நூற்பொருளை ஓசையோடு விரித்துரைப் பவர்போல் மலைகள் குடித்த நீரை அருவியாக முழக்கத்தோடு விரித்துப் பரப்பின.

(பொ - ரை.) படித்த நூற்பொருள்களை அவை யோர்க்குப் பயன்படும் வண்ணம் ஓசையொடு விரித்துரைப் பவரைப்போல் சூற்கொண்ட நீலமேகம் தவழ்கின்ற முடிக ளோடு பொலிந்த அழகிய மலைகள் தாம் குடித்த நீரை யெல்லாம் கொப்புளித்தமையால் அமுதம் போன்ற அருவி கள் கற்பாறைகளில் மோதி மாறாத ஓசை கிளம்ப அலையை வீசி உருண்டு ஓட எ - று.

நூல் - நூற்பொருள். அவை-அவையோர்க்கு, ஆகுபெயர். (௪)

அருவியின் றேற்றம்

புள்ளி மால்வரை பொன்னுல
கிடத்தெடுத் துய்த்த
வுள்ளி வான்விடும் வடமெனத்
தாரைக ளொழுக
வெள்ளி நீடொடர் விசித்ததைப்
பிடித்தெனச் சூழத்
துள்ளி வீழுயர் தூங்கிய
வருவியின் றேற்றம்.

(க - ரை.) மலையைக்கட்டி இழுத்துத் தன்னுலகத்திற்குக் கொண்டுபோகக் கருதி வானுலகம் விடுத்த வெள்ளி வடங்கள் போல் மழைத்தாரைகள் ஒழுகின. மலையைச் சுற்றி வீழும் அருவி நிலம் மலையை விடாமல் வெள்ளிச் சங்கிலியால் கட்டிப் பிடித்துக் கொள்வதுபோலிருந்தது.

(பொ - ரை.) சிறந்த பெரிய மலையைத் தன் இடத்திற்குக் கட்டி இழுத்துச் செல்லுதற்கு நினைத்து வானுலகம் விடுகின்ற வெள்ளி வடங்கள் போல மழைத்தாரைகள் ஒழுக, நிலவுலகம் அதனைப் பொறுக்காமல் நீண்ட வெள்ளிச் சங்கிலியால் மலையைச் சுற்றிக் கட்டிப் பிடித்துக்கொண்டது போல, மலையிலிருந்து துள்ளி வீழ்கின்ற—உயர்ந்த—தொங்குகின்ற அருவியின் தோற்றமும் சூழ எ - று.

புள்ளி - சிறப்பு. மால்வரை - பெரியமலை. நீடொடர் - நீள் தொடர். 'நீண்டுடர்,' என்பது பழைய பதிப்பு. விசித்து-கட்டி.

''புள்ளி மால்வரை பொன்னெனல் நோக்கி வான்
வெள்ளி வீழிடை வீழ்த்தெனத் தாரைகள்
உள்ளி யுள்ளவெல் லாமுவந் தீயுமவ்
வள்ளி யோரின் வழங்கின மேகமே''

என்றார் கம்பர்.

''வெள்ளிவெண்
கோனிரைத்தன போற்கொழுந் தாரைகள்
வானி னின்றம ணந்து சொரிந்தவே''

என்பது சீவகசிந்தாமணி.

(ரு)

வெள்ளம் முல்லை நிலத்தில் பாய்தல்

ஒண்ணு ரைத்தெரி யுமிழ்ந்தவிர்
இனமணி வரன்றித்
தெண்ணு ரைத்தெழுந் திரைத்திரள்
வயின்றொறும் புகுந்து
வண்ணு ரைத்தெதிர் வதிந்தெலாஞ்
சாய்த்தவை கொடுபோய்ப்
புண்ணு ரைத்தடக் கொள்ளைசெய்
பொருந்தலர் போன்றே.

ஒள் நுரைத்து எரி உமிழ்ந்து - ஒளிநிறைந்து கதிர் பரப்பி. தெள் நுரைத்து எழும் திரைத்திரள் - நுரையொடு தெளிந்து எழும் அலையையுடைய வெள்ளம். வள் நுரைத்து - வளம் மிக்கு, வலிமை மிக்கு. புண் உரைத்து - புண்படுத்தி. அட - கொல்ல.

(க-ரை.) கொள்ளையடிக்கின்ற பகைவர்போல் வெள்ளமும் மலையின் இடந்தோறும் புகுந்து மணி வகைகளை வாரிக்கொண்டு எதிர்ந்தவற்றைச் சாய்த்துக்கொண்டு போகா நின்றது.

"தெண்ணுரைத் தெழும் ........... புகுந்து
புண்ணுரைத்து ........... போன்றே
ஒண்ணுரைத்து ........... வரன்றி
வண்ணுரைத்து ........... கொடுபோய்"

என்று கூட்டுக.

(பொ - ரை.) தெளிவாக நுரைத்து எழுகின்ற அலைகளையுடைய வெள்ளம் இடங்கள்தோறும் புகுந்து, புண்படுத்திக் கொன்று கொள்ளையடிக்கின்ற பகைவரைப்போல், ஒளி நிறைந்து கதிர் பரப்பி விளங்குகின்ற மாணிக்கம் முதலிய பலவகை மணி யினங்களை வாரிக்கொண்டும் எதிரே இருந்த புதர் மரம் பூங்கா ஆகிய எல்லாவற்றையும் சாய்த்து அவற்றை இழுத்துக்கொண்டும் சென்று எ - று.

வதிந்தெலாம் - வதிந்த எலாம்: அகரந்தொக்கது. கொடு - கொண்டு: இடைக்குறை. அட்டு என்பது அட எனத் திரிந்து நின்றது. (கூ)

### புனல் மருத நிலத்தில் உலாவல்

விரைகி டந்தசை வீயுமிழ் மதுவினுல் பெருகி
நிரைகி டந்தெழுஞ் சோலையுங் கழனியும் நிறைப்ப
வரைகி டந்திழி வளம்புனல் எங்கணும் உலவல்
திரைகி டந்துயிர் சீர்த்துறப் புலாவிய போன்றே.

(க - ரை.) மலையிலிருந்து இறங்கிய வண்புனல் மலர்த் தேனெடு கூடிப் பெருகி சோலை கழனி முதலிய எங்கணும் உலாவுதல் பருகிய நீர் உடலுறுப்புத்தோறும் பரவியதுபோல.

(பொ - ரை.) மலையிலிருந்து இறங்கிய வளமான தண்ணீர், வெள்ளத்தில் நின்று அசைகின்ற முல்லையம் புதரிலுள்ள மணமுள்ள மலர்கள் துளித்த தேனெடு கூடிப் பெருகி, ஆனிரை கிடந்து எழுகின்ற சோலைகளையும் வயல் களையும் நிறைக்கும் பொருட்டு எல்லா இடங்களிலும் உளாவுதல் பருகிய நீர் குடரில் சென்று தங்கி உயிரைச் செழிக்கச்செய்து உறுப்புத்தோறும் சென்று உலாவிய (செயலைப்) போன்று (விளங்கிற்று) எ - று.

விரைகிடந்த அசைவீ - வெள்ளத்தில் நின்று அசைகின்ற முல்லையம் புதரிலுள்ள மணமுள்ள பூக்கள். திரை - தண்ணீர். கிடந்து - வயிற்றில் தங்கி. வினைமுடிபு கூட்டிக்கொள்க. (எ)

அஞ்சி லாவெதிர் அடுக்கிய கல்லெலாங் கடந்தே
யெஞ்சி லாவெழி லிமைத்தநீண் மருதமு நீக்கித்
துஞ்சி லாநதி தொடர்ந்தகல் கருங்கடல் நோக்கல்
விஞ்சை யாரெலாம் வெறுத்துவீ டிவறிய போன்றே.

(க - ரை.) குறிஞ்சியையும் மருதத்தையும் கடந்து ஆறு நெய்தல் நிலத்திற்போய்க் கடலிற் சேர்தல் அறிவுடையோர் எல்லாவற்றையுங் கடந்து வீடுபேற்றை விரும்பியதைப் போன்றது.

(பொ - ரை.) அஞ்சுதல் இல்லாது தனக்கு எதிரே அடுக்கிய கல்லையெல்லாம் கடந்து குறைதல் இல்லாத அழகு விளங்கும் மருத நிலத்தையும் கைவிட்டுத் தளர்தல் இல்லாத ஆறு தொடர்ந்து சென்று கருங்கடலிற் சேர

நோக்குதல், அறிவுடையவரெல்லாம் அறம் பொருள் இன்பங்களைக் கடந்து வீடுபேற்றையடைய விரும்புவது போன்றே (விளங்கிற்று) எ - று.

அஞ்சிலா - அஞ்சு(தல்) இலாது. இலா: ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். எஞ்சிலா - எஞ்சு(தல்) இலாத. இலா: ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். குறைதல்இல்லாத என்பது பொருள். துஞ்சிலா - துஞ்சு(தல்) இலாத. அஞ்சு, எஞ்சு, துஞ்சு என்பன முதனிலைத் தொழிற்பெயர்கள். (அ)

மலையி னேரறல் மலையநாற் றிணையருந் தியபின்
அலையி னேருறு மவனிதன் மகார்க்கெலா மூட்டி
முலையி னேருறீஇ விஞ்சுபால் முடுகலி லுடுத்த
கலையி னேருறீஇக் களிப்பொடு சிந்துதல் போன்றே.

மலையின் நேர் அறல். நேர்(தல்) வருதல். அறல் - தண்ணீர். முலையின் நேர் உறீஇ. உறீஇ - சுரந்து. நேர்(தல்) வருதல். கலையின் நேர் உறீஇ—உறீஇ—விழுந்து.

(க - ரை.) நிலமடந்தை என்னும் தாயின் கொங்கையாகிய மலையில் சுரந்த நீரானது நாற்றிணையும் அருந்திய பின்பும் அது கடலிற்சென்று கலக்கும் அத் தாய்முலையிற் சுரந்த பால் மகவு களிப்பொடு உண்ட பின்பும் மிகுந்து அவளது நீல ஆடையில் சிந்துவது போன்று.

(பொ - ரை.) மலையிலிருந்து வருகின்ற தண்ணீரை நான்கு நிலமும் செழிக்க உண்ட பின்பும் அது நேரே அலை கடலிற்போய்ச் சேரும் நிலமடந்தை தன் முலையிற் சுரந்து வந்த மிக்க பாலை விருப்பத்தோடு மக்கட்கெல்லாம் ஊட்டிய பின்பும் அது பெருகி அவளுடைய நீல ஆடையின்மேல் சிந்துவது போன்றே.

பால் கலையில் சிந்துவதுபோன்று நீர் அலையில் உறும். (க)

சேறியு லாம்புனல் சிறைசெய்து பயன்பட வோதுக்கி
வேறியு லாமவர் மிடைந்தகல் வயல்வழி விடுவார்
போறியு லாம்வழி போக்கில தியல்பட வடக்கி
நேறியு லாவறம் நேரவை நிறுத்தினர் போன்றே.

அறம் உலாவு நேர் நெறி என்று மாற்றிக் கூட்டுக.

(க-ரை.) ஐம்பொறிகளின் வழியே செல்லும் ஐம்புல உணர்வுகளையும் அவற்றின் போக்கில் செலுத்தாமல் அறநெறியிற் செலுத்தும் அறவோர் போல் ஐந்திணையிலும் உலாவும் புனலை ஏரியிற் றேக்கி வாய்க்கால்வழி யொதுக்கி வயல்களிற் பாய விடுவார் உழவர்.

(பொ-ரை.) மிகப்பரந்து ஓடும் புனலை ஏரியில் தேக்கி வைத்து வயலுக்குப் பயன்படும் வண்ணம் வாய்க்கால் வழியாக நெறிப்படுத்தி யொதுக்கி மணம் சூழ்ந்த மலர்கள் மிக்க வயல்களினிடந்தோறும் பாயவிடுவார்கள் (உழவர்கள்). பொறிகள் உலாவுகின்றவழியானது போகும் நெறி இலதாய் மறைய நல்லியல்புபட அவற்றை யடக்கி அறம் உலாவுகின்ற நேர்மையான நெறியில் அவற்றை நிறுத்திய சான்றோர்களைப் போன்றே எ-று.

செறி - மிகுதல்: முதனிலைத் தொழிற்பெயர். (௧0)

உவர்க்குந் தாழ்கட லுடுத்தகல் விரிதலை ஞாலம்
எவர்க்குந் தாயென வெண்ணிலாக் கிழிபடக் கீறு
மவர்க்குந் தானுண வளித்தலே நோய்செய்வார்க் குதவி
தவர்க்குந் தாவருந் தருமமேன் றியற்றுதல் போன்றே.

(க-ரை.) ஞாலத்தைத் தாயென்று நினையாமல் உழுபடையால் கிழிபடக் கீறுபவர்க்கும் அது உணவளித்தல், அறவோர், தமக்குத் துன்பஞ் செய்வார்க்கும் உதவி, தவமுனிவர்க்கும் தாவுகின்ற அருந்தருமத்தை என்றும் செய்வது போன்று இருந்தது.

(பொ-ரை.) உவர்க்கின்ற தாழ்ந்த கடலாகிய ஆடையை உடுத்து அகன்று விரிந்த இடத்தையுடைய ஞாலம் எவர்க்கும் தாய் என நினையாமல் நெஞ்சு கிழிபட உழுகின்றவர்க்கும் (மற்றையோர்க்கும்) உணவு வழங்குதல் அறநெறியினர் தமக்கு இன்னா செய்தார்க்கும் உதவிசெய்து தவமுனிவர்க்கும் தாவுகின்ற அரிய அறத்தை என்றும் இயற்றுதல் போன்றே (விளங்கிற்று) எ-று.

தாவு அரும் தருமம் - (செய்யப்பட்டுப்) பரவுகின்ற அரிய அறம் கிறுமவர்க்கும் - உழுபவருக்கும்: இறந்தது தழீஇய எச்சவும்மை. ஏனையோர்க்கேயன்றிக் கிறுபவர்க்கும் என்க.

அறவோர் தவமுனிவர்க்குச் செய்கின்ற அருந்தருமத்தை நோய் செய்வார்க்கும் இயற்றினர் என்க. (கக)

கூர்வி ளைத்தருட் குருவிதி போன்றுேன்று கோடி
நீர்வி ளைத்தநெல் நிரம்பென வித்தின ரிரட்ட
வேர்வி ளைத்தபற் கடைசியர் குரவையா டியல்பாற்
றேர்வி ளைத்தவோர் சிறப்பெழும் விழாவணி போன்றே.

(க - ரை.) அருட்குருவின் மொழி ஒன்று கோடியாகப் பெருகி ஞானம் பயப்பதுபோல் நீரால் விளையப்பெறும் நெல்லும் ஒன்று கோடியாக விளைக என விதைத்தவர் முழங்க உழத்தியர் குரவைக் கூத்தாடும் இயல்பு தேர்த் திருவிழாவைப் போல் சிறந்து தோன்றிற்று.

(பொ - ரை.) அருட்குரு மிகுதியாக ஞானத்தை விளைவித்த முறைமை ஒன்று கோடியாவது போல், நீர் விளைவிக்கும் நெல்லும் ஒன்று கோடியாக நிரம்புக என விதைத்த உழவர்கள் முழங்க வேர்வை அரும்பிய பல கடைசியர்கள் (உழத்தியர்கள்) குரவைக்கூத்து ஆடுகின்ற இயல்பினால் மருத வயல்களின் நிகழ்ச்சியும் தேரோட்டம் நிகழ்த்திய ஒரு சிறப்புமிக்க திருவிழாவின் அழகுபோன்றே (விளங்கிற்று).

அருட்குரு கூர்விளைத்த விதி என்று கூட்டுக. கூர் - மிகுதியாக, விளைத்த - ஞானத்தை விளைவித்த. (கஉ)

நோக்க வின்புள நகரவோண் முளரியோ டாம்பல்
நீக்க லாதேலா நீர்மலர் களையெனக் கட்டல்
ஆக்க மாக்கினு மறனிழந் தாவது கேடேன்
றாக்க மாண்பினர் ஒருங்கவை யொழிக்குதல் போன்றே.

(க - ரை.) அறநெறி தவறிய செல்வம் இன்பம் பயக்குமேனும் கொள்ளாத அறவோர்போல நெறி தவறி முளைத்த ஆம்பல் தாமரை முதலியவற்றைப் பயன் கருதாமல் களைந்து நீத்தனர் உழவர்.

(பொ - ரை.) நோக்க ஒளியின்பமும் நுகர மண இன்பமும் உள்ள ஒள்ளிய தாமரைப் பூவினையும் ஆம்பற் பூவினையும் மற்றும் எல்லா நீர்மலர்களையும் விட்டுவைக்காமல் களைகள் என்று களைதல், அறநெறி தவறி வருஞ் செல்வம் ஆக்கத்தை உண்டாக்கினும் கெடுதலுடையதே என்று ஊக்கத்தையுடைய பெருமையுடையவர் அவற்றை முழுதும் ஒழித்துவிடுதல் போன்றே (காணப்பட்டது) எ - று.

முறையாக இட்ட நெற்பயிரினுள் முறையின்றி முளைத்த தாமரை ஆம்பல் இவற்றைக் களைத லறமாயிற்று என்க. நோக்க நுகர இன்பு உள ஒண்முளரி என்று கூட்டுக.

நோக்க நுகர என்ற செயவெனெச்சம் உள என்ற குறிப்புப் பெயரெச்சத்தைக் கொண்டு முடிந்தது. கட்டல் - களைதல், (கரு)

பூரி யார்திருப் போறலை பசியகூழ் நிறுவி
நீரி ஞர்தலை நேரநேர் வளைவோடு பழுத்த
ஆர மானுநேல் அறுத்தரி கோண்டுபோ யங்கட்
போரி தாமேனக் களித்தனர் போர்பல புனைவார்.

(க - ரை.) செல்வச் செருக்கடைந்த சிறியோர்போல் கிமிர்ந்து நின்ற கதிர் நீர்மை நிறைந்த பெரியோர்போல் வளைந்து முற்ற அறுவடை செய்து அடைந்தனர்.

(பொ - ரை.) செல்வச் செருக்கடைந்த சிறியோரைப் போல் பசிய நெற்பயிர் நேரே கதிர்களை ஈன்று தலை நிறுவிப் பின்பு பண்பு நிரம்பிய பெரியோர் முன்னோக்கிப் பணிவது போல முன்னே வளைதலொடு முற்ற அந்த முத்துப் போன்ற நெற்கதிர்களை அறுத்து அந்த அரிகளைக்கொண்டு போய் அவ்விடத்தில் இதுவே போராகுமென்று களிப்புக் கொண்டவராய்ப் போர்கள் பலவற்றை அடைவாராயினர். எ - று.

"சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் தோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே"

என்பது சீவகசிந்தாமணி.

கூழ் - பயிர். நீரினர் - நீர்மையுடைய பெரியோர். ஆரம் - முத்து. (கச)

மெய்க லந்தபோய் விலக்கிமெய் கோள்பவர் வினைபோல்
வைக லந்தநெல் பகட்டினல் தெளித்துவை மறுத்துக்
கைக லந்தடுத் தேற்குநர்க் களித்தபின் களித்துத்
துய்க லந்தநெல் லுண்ணவும் ஈயவுந் தொகுப்பார்.

(க - ரை.) பொய்நீக்கி மெய்கொள்பவர்போல் வைக்கோலை நீக்கி நெல்லைக்கொண்டு இரவலர்க்கு வழங்கிப் பின் உண்ணவும் ஈயவும் தொகுப்பாராயினர்.

(பொ - ரை.) மெய்யொடு கலந்த பொய்யை நீக்கி மெய்யைக் கொள்பவர் செயலைப்போல் வைக்கோலொடு கலந்த நெல்லைக் கடாக்களின் பிணையலினல் துவைத்து வைக்கோலை நீக்கித் தம்மையடுத்து இரந்தவர்க்கு முதலில் ஈந்த பின்பு அதனல் மகிழ்வடைந்து துய்ப்பதற்கு உரிய நெல்லை உண்ணவும் ஈயவும் தொகுப்பாராயினர் எ - று.

வை - வைக்கோல், பகடு - எருது. கடாக்களெனினும் அமையும், துய் - துய்த்தல், துய்த்தற்குக் கலந்த (பொருந்திய) நெல் என்க. (கரு)

ஈத லோடிசை யினிய வாழ்வுகள்
ஆத லோடறன் அழிவி லாக்கினர்
காத லோடடேல் கடிய நாள்வர
வீத லோடறும் வீட்டில் வாழ்வரே.

(க - ரை.) அறம் வீடு பயக்கும் என்றது.

(பொ - ரை.) ஈதலும் இசைபட வாழ்தலுமாகிய இனிய வாழ்வுகள் நடத்தலோடு அழிவில்லாத பேரறத் தினையும் செய்தவர்கள் இன்பத்தோடு தம் உடலை நீக்குவதற்கு உரிய நாள்வர மறைதலோடு தாம் அடைதற்கு உரிய வீட்டுலகத்திலும் சென்று வாழ்வர் எ - று.

'ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல
தூதிய மில்லை உயிர்க்கு'

என்னும் பொய்யாமொழிக்கு ஏற்ப வாழ்ந்து வந்தார்கள். (கசு)

மறமோ டாகுல மலிந்த தீதேலாம்
புறமோ டாகையின் போருவி லாவளர்
அறமோ டான்றசூ தேய நாடமை
திறமோ டாண்மையைச் சேப்பச் சீரதோ.

(க - ரை.) அறஞ்சான்ற சூதேய நாட்டின் ஆற்றல் அளவு படாது என்பது.

(பொ - ரை.) வன்செயலும் துன்பமும் மிகுந்த தீமையாவும் அந் நாட்டிற்குப் புறம்பு ஆகையினுல் ஒப்பிலாது வளர்கின்ற அறத்தொடு பொருந்திய சூதேய நாட்டிலமைந்த அறிவுத்திறத்தோடு கூடிய ஆண்மைத் திறத்தை இயம்ப அது அளவுபடுவதோ? எ - று.

சீர் - சொற்சீரினளவு. (கஎ)

மிடியி லார்நயன் வினைவில் மாற்றுவான்
முடியி லார்கனிப் போறைபோ ருமுயன்
றடியி லாருயி ரமைந்த நீர்தோழக்
கடியி லார்மரம் வளைதல் காணுமே.

(க - ரை.) பழ மரத்தில் கோடுகள் வளைந்து நிற்றல் வறண்ட காலத்தில் தனக்கு ஆருயிரா யமைந்த தண்ணீரைத் தாழ்ந்து வணங்குவதுபோல் காணப்படும்.

(பொ - ரை.) வறுமையடைந்தபோது ஆர வழங்கிச் செய்த நன்றிக்கு ஈடாகப், பொருள் மிகுந்த காலத்தில் கொடைக்கடனை மாற்றும் பொருட்டு, உச்சியில் செறிந்த கனிகளின் சுமையைப் பொருமல் முயன்று, தன் அடியி லிருந்து ஆரச்செய்த உயிராயமைந்த தண்ணீரைத் தொழ, வனத்திற் செறிந்த மரம் வளைந்து நிற்றல் காணப்படு கின்றது எ - று.

மிடி - வறுமை, கடி - நந்தவனம். (கஅ)

ஆலை யார்புகை முகிலென் றூர்ப்பேழச்
சோலை யார்மயில் துள்ளி மாங்குயில்
மாலை யாரிருள் விரும்பும் மாக்கள்காண்
மேலை யாரேன மேலிந்து தேம்புமால்.

(க - ரை.) ஆலைப்புகையைக் கண்டு முகிலென்று நினைத்து மயில்கள் துள்ளி ஆர்க்கின்ற ஆர்ப்பு மிகக், குயில்கள் இருள் விரும்பும் திருடர்களைக் கண்டு நல்லோர் தளர்வதுபோல் தளர்ந்து வருந்துவன வாயின.

குறிப்பு: மயிலீ கார்காலம் கண்டு மகிழும்
குயில் கார்காலங் கண்டு தளரும்.

(பொ - ரை.) கரும்பாலையில் எழுகின்ற புகையை முகிலென நினைத்துச் சோலையிற் செறிந்துள்ள மயில்கள் துள்ளி ஆர்க்கின்ற ஆர்ப்பு எழ அப்புகையைக் கண்ட மாங் குயில்கள் மாலையிற் செறிகின்ற இருளை விரும்புகின்ற கள்வ மாக்களைக் காண்கின்ற மேலோரைப் போலத் தளர்ந்து வருந்துவன வாயின எ - று. (கசு)

மல்ல விள்ளலர் மலிந்த கான்றோறும்
புல்ல வன்பறுப் பொருது காரணம்
இல்ல தொல்லெனக் குறும்புள் ஈந்தபோர்
அல்ல தில்லையோ ரமர்அந் நாட்டிலே.

(க - ரை.) மலர் வனத்தில் காரணமின்றிக் காடைகள் பொருகின்ற போரன்றி வேறு போர் எதுவுமில்லை அந்த நாட்டில்.

(பொ - ரை.) வளமாக மலர்ந்த மலர் மலிந்த வனந் தோறும் பொருதற்குரிய காரணம் இல்லாதிருக்கவும் காடைகள் புல்லுதற்குரிய அன்பற்று ஒல்லென ஆரவாரித் துச் செய்யும் போரன்றி வேறு ஓரமர் அந்நாட்டில் இல்லை, எ - று.

அறு - அற்று, புல்லுதற்கு உரிய அன்பு அறுமலேயே குறும்பூழ் செய்த போர் எனினும் அமையும். (உ0)

தீயே ழத்தகர் சினந்து தாக்குப
மீயே ழத்துகள் விரைந்து பின்னுறல்
நோயே ழப்பகை நுதலு மோன்னலர்
வாயே ழச்சேயும் வணக்கம் மானுமே.

(க - ரை.) முட்டுகின்ற கடா பின்வாங்குதல் பகைகருதிய பகைவர் வாய்மொழியினுல் காட்டும் வணக்கம் போலும்.

(பொ - ரை.) சினங்கொண்டு நெருப்புப் பொறி பறக்கத் தாக்குவனவாகிய கடாக்கள் தங்கள் மீதெழுந்து பரவ மிகவும் விரைந்து பின்னுறுதல் மனத்தில் வருத்தம் மிகப் பகைமை கருதும் பகைவர் தமது வாய்ச்சொல்லில் மட்டும் காட்டுகின்ற வணக்கம் போலும் எ - று.

"ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேரும் தகைத்து." (உக)

வேர்ப்பெ ழக்கயல் விழியர் கைவளை
ஆர்ப்பெ ழக்கடை தயிரி லாயநெய்
கூர்ப்பெ ழத்துயர் குறுக மேலறம்
ஏர்ப்பெ ழச்செய்வோ ரியல்பு மானுமே.

(க - ரை.) அறம் மறைய ஆரவாரமும் துயரும் ஓங்கும். அறம் மேலோங்க ஆரவாரமும் துயரும் குறுகும். வெண்ணெய் மறைந்து நிற்கக் கடைதலும் ஆரவாரம் ஓங்குகின்றன, வெண்ணெய் மேலெழ ஆரவாரமும் துயரும் குறுகுகின்றன.

(பொ - ரை.) கயல்விழி மாதர்கள் கைவளைகளின் ஆர்ப்பெழவும் மேனியில் வேர்வை எழவும் கடைகின்ற தயிரில் வெண்ணெய் சிறந்து எழுந்து தோன்றும் காட்சி துயரினைக் குறுகச்செய்வதற்கு மேன்மையான அறம் மேலோங்கு மியல்பும் அதனை ஓங்கச் செய்வோர் இயல்பும் ஒக்கும் எ - று.

கூர்ப்பு - உள்ளது சிறத்தல், "கூர்ப்புங் கழிவு முள்ளது சிறத்தல்" (தொல் - உரியியல்). (உஉ)

கழைஇ ருல்பனை கனிகள் தேங்கலர்
உழையில் தாவிய தேறல் உண்டபின்
மழையில் தாவிய மதுவின் ஊங்கினி
திழைஇ ருவழ கிளம்புள் பாடுமால்.

(க - ரை,) கரும்பு தேனடை பழம் தென்னை மலர் இவற்றின் தேனுண்ட புள்ளினம் தேனினும் இனிமையாகப் பாடுகின்றன.

(பொ - ரை.) கரும்பும் தேன்கூடும் பனையும் கனி களும் தென்னையும் மலரும் ஆகிய இவற்றிலிருந்து பாய் கின்ற தேனைப் பருகியபின் தண்ணீரோடு சென்று கலந்த அந்தத் தேனினும் மிக்க இனிமையைக் கலந்து இடை யறாது இளம்புள்ளினங்கள் பாடும் எ - று.

கழை - கரும்பு, இறால் - தேனடை, புள் - பறவையும் வண் டினமும். (உ௩)

உண்ட கன்றகன் றுள்ளி மேதிகள்
மண்ட அன்புறீஇ வழிந்த பாற்றிரள்
கொண்ட அன்னமே குடித்த லாவது
கண்ட தங்குள களவி தாமரோ.

(க - ரை.) கன்றை நினைத்து எருமை பொழிந்த பாலை அன்னப் பறவைகள் கவர்ந்து குடித்தலாகிய களவன்றி வேறு களவு அங்கேயில்லை.

(பொ - ரை.) பாலுண்டு பிரிந்த கன்றை நினைத்து எருமைகள் அன்புமிக்குப் பொழிந்த பாலைத் திரண்ட அன்னப் பறவைகள் குடித்தலே அங்கே காணப்பட்டதாக வுள்ள களவு.

வேறுகளவில்லை என்பது குறிப்பெச்சம். (உ௪)

குயிலி னத்தொடு கொம்பி லார்கிளி
பயிலி னத்தொடு ஞிமிறும் பாடவே
துயிலி னத்தொடு விரித்த தோகைகொள்
மயிலி னத்தொடு மகளி ராடுமால்.

(க - ரை.) குயிலும் கிளியும் வண்டும் பாட மயிலினத் தோடு மகளிரினமும் ஆடும்.

(பொ - ரை.) குயிலினங்களொடு கொம்புகளிலமர்ந் திருக்கின்ற கிளிகளும் வண்டுகளும் தாம் பயின்ற இனங்க ளொடு பாடத் துகிலின் தொகுதிபோல் விரித்த தோகை கொண்ட மயிலின் கூட்டத்தோடொப்ப மகளிரும் ஆடுவா ராயினர் எ - று.

துகில் எனற் பாலது துயில் என எதுகை நோக்கித்திரிந்தது ஞிமிறு - வண்டு. ஆடும் என்ற செய்யுமென்முற்று பலர் பாலுக்கு வருதல் விதி விலக்கு. (உரு)

காசி லம்புவ களித்த புள்ளினம்
வீசி லம்புவ மிடைந்த தும்பிகள்
பாசி லம்புவ சிலம்பப் பண்புகழ்
நாசி லம்புவ சிலம்பு நாடெலாம்.

(க - ரை.) பறவைகளும் தும்பிகளும் பாடுகின்ற பாடலும் பண்ணும் புகழும் நாடெல்லாம் ஒலிக்கும்.

(பொ - ரை.) காவெல்லாம் களித்த புள்ளினம் ஒலிக்கவும் மலரெல்லாம் நெருங்கிய தும்பிகள் ஒலிக்கவும் பாடல் ஒலிக்கவும் பண்ணொலிக்கவும் நாவெல்லாம் புகழ்பாடவும் ஆக நாடெல்லாம் இத்தகைய ஒலியே ஒலிக்கும் எ - று.

சிலம்புவ என்று வருவனவற்றை முற்றெச்சமாகக் கொள்க. (உசு)

முட்டி ரட்டின முரண்த கர்பெடை
பெட்டி ரட்டின குயில்பி ளிர்ந்தமுத்து
இட்டி ரட்டின கரும்புஇன் பீன்றகள்
விட்டி ரட்டின வீயி னங்களே.

(க - ரை.) கடாக்கள் முட்டியும் குயிற்சேவல் பெடையைக் கூவியும் கரும்பு முத்துக்களைத் தெரித்தும் மலர்கள் தேனைத் துளித்தும் ஒலித்தன.

(பொ - ரை.) ஒன்றோடொன்று மாறுபட்ட ஆட்டுக் கடாக்கள் முட்டுகின்ற முட்டுக்கள் மாறிமாறி யொலித்தன. குயிற் பெடை சேவலை(ப் பெட்டு) விரும்பியும், சேவல் பெடையை விரும்பியும் மாறிமாறி யொலித்தன. கரும்பின் கூட்டங்கள் திரண்ட முத்துக்களை யிசைத்து எறிந்து ஒலித்தன. மலர்க் கூட்டங்கள் இன்பம் மிக்க தேன்றுளிகளைத் துளித்து (அத் தேனை யுண்ணும் வண்டினங்களால்) ஒலித்தன.

இன்பீன்றகள் - இன்பு ஈன்றகள் - இன்பம் மிக்க தேன்.

ஒருமுறை பெடையை எழுவாயாகவும் குயிலைச் செயப்படு பொருளாகவும், மற்றொருமுறை குயிலை எழுவாயாகவும் பெடையைச் செயப்படுபொருளாகவும் கொண்டு மாறிமாறிக் கூவியதற்கு ஏற்ப உரைக்க.

பெடை பெட்டு இரட்டின குயிலை என்றும் பெடையைப் பெட்டு இரட்டின குயில் என்றும் உருபு ஏற்றிப் பொருள் கொள்க. (உஎ)

நிழலிற் கண்சிறை படுத்தும் நீள்பொழில்
குழலிற் பூச்சிறை படுத்துங் கோதையார்
கழலிற் காற்சிறை படுத்துங் காந்தர்நீர்
விழலிற் றன்சிறை படுத்தும் வேலியே.

(க - ரை.) சோலைநிழல் கண்களைக் கவர்ந்துசிறைசெய்யும். கோதையர் குழல் பூக்களை முடித்துச் சிறைசெய்யும். காந்தர் கழலை யணிந்து கால்களைச் சிறைசெய்வர். மருதநிலம் விழுகின்ற தண்ணீரை வரம்புகளால் சிறை செய்யும். இவையன்றி வேறு சிறைப்படுதல் இல்லை.

(பொ - ரை.) உயர்ந்த சோலைகள் நிழலினுல் கண்களைக் கவர்ந்து சிறைசெய்யும்; கோதையர் கூந்தலில் பூக்களை முடித்துச் சிறை செய்வர். ஆடவர் கழல்களை யணிந்து கால்களைச் சிறைசெய்வர். மருதவேலியாகிய வயல்கள் தண்ணீர் வந்து தம்மிடம் விழுதலினுல் அதனை வரம்புகளால் தடுத்துச் சிறை செய்யும் எ - று.

படுத்தும் என்ற செய்யுமென்னும் முற்று பலர் பாலுக்கு வருதல் பழைய இலக்கண நெறியிலிருந்து விலகிவந்தது.

இத்தகைய முறையிற் சிறை செய்தலே யன்றி வேறு தவறு செய்பவரும் சிறைசெய்யப்படுபவரும் கால் தளையிடப்படுபவரும் நீர்மை தாழ்தலினுல் சிறையிடப்படுபவரும் ஆங்கே இல்லை என்பது குறித்தலின் ஒழித்துக் காட்டணி. (உஅ)

துன்ன லிற்சிறை படுத்தத் தோம்இலால்
அன்ன பற்சிறை அல்ல தில்லையால்
பொன்ன நற்சிறை அன்னப் புள்ளுறை
மன்ன வர்க்கிறை வழங்கும் நாட்டிலே.

(தன் அல் இல் - செறிந்த இருளையுடைய வீடு; அஃதாவது சிறைச்சாலை; அல்லது இருட்டறை.)

(க - ரை.) அன்ன வயல் சூழ் சூதேய நாட்டில் மக்களைச் சிறையகப்படுத்த வென்றாலோ அதற்கு உரிய குற்றமில்லை. ஆதலால் முந்திய பாடலிற் கூறிய சிறையன்றி வேறு சிறையில்லை.

(பொ - ரை.) பொலிவுள்ள நல்ல சிறகுகள் உள்ள அன்னப் பறவைகள் உறைகின்ற(தும்) அரசர்க்குத் திறை வழங்குவதும் ஆகிய அந்தச் சூதேய நாட்டில், இருட்டறையாகிய சிறையில் மக்களை யகப்படுத்தற்குரிய குற்றங்களின்மையின் முற்கூறிய பல சிறைகளல்லது வேறு சிறைச்சாலைகள் இல்லை.

அன்னப் புள்ளின் பொன்ன நற்சிறையன்றி இருள் தன்னிய புன்சிறை இல்லை என்பது குறிப்பு. "சிறைபட்டுள்ளது விண்ணெழும் புள்ளு" என்பது முக்கூடற் பள்ளு. அன்னப் பறவை சிறைபட்டிருத்தலன்றி (சிறகுகளோடு பொருந்தியிருத்தலன்றி) மக்கள் சிறைப்பட்டிருத்த வில்லை. (உக)

வாய்ந்த செந்நெலை மறுகும் பண்டியும்
ஆய்ந்த மெல்லிலை அமையும் பண்டியும்
பாய்ந்த பூகவோண் பழம்பெய் பண்டியும்
வேய்ந்த தீங்கனி விம்மும் பண்டியும்.

(க - ரை.) நெல், வெற்றிலை, கமுகம்பழம், இனிய பழம் இவைகளையுடைய வண்டியும்.

(பொ - ரை.) கிடைத்த செந்நெல்லைச் சுமந்து திணறுகின்ற வண்டிகளும், ஆய்ந்து கட்டப் பெற்ற வெற்றிலைக் கட்டுக்கள் பொருந்தி யிருக்கின்ற வண்டிகளும், உயர்ந்த கமுகின் ஒள்ளிய பழங்களைக்கொண்ட வண்டிகளும், மரங்களில் பரவலாகக் கனிந்து கிடந்த இனிய கனிகள் மிகுந்து கூடுகள் புடைக்கின்ற வண்டிகளும்; (௩0)

பன்னுந் தெங்கிள நீர்பெய் பண்டியும்
துன்னுந் தீங்கழை சுமக்கும் பண்டியும்
மின்னுந் தேன்சேறி வீபெய் பண்டியும்
மன்னுந் தேசுபன் மணிகோள் பண்டியும்.

(க - ரை.) இளநீர், கரும்பு, மலர்கள், மணிகள் ஆகிய இவைகள் ஏற்றப்பட்ட வண்டிகளும்.

(பொ - ரை.) நெருங்கிய தெங்கின் இளநீர் ஏற்றிய வண்டிகளும் நிறைந்த இனிய கரும்பு சுமக்கும் வண்டியும் மின்னுகின்ற தேன் நிறைந்த மலர்கள் ஏற்றிய வண்டியும் பொருந்திய பொன்னும் பலவகை மணியும் இடங்கொண்ட வண்டியும்.

தெங்கு - தென்னை, தீம்கழை - இனிய கரும்பு. வீ - பூ. தேசு - பொன். (௩க)

துளித்த தேறலைத் துவலை சோலைசூழ்
களித்த நாடெலாம் கசடில் வாழ்வுறச்
சுளித்த மள்ளர்கள் தூண்டும் ஏற்றினம்
திளைத்த பண்டிகள் நெருங்கித் தேயுமால்.

(க - ரை.) முந்திய பாடல்களில் கூறிய பலவகை வண்டிகளும் ஒன்றோடொன்று நெருங்கித் தேயும்.

(பொ - ரை.) துளித்த தேனின் துவலைகளையுடைய சோலைகளாற் சூழப்பட்ட களிப்பு மிகுந்த அந்நாடு முழுதும் குறைவில்லாத வாழ்வு மிகச் சினந்த பள்ளர்கள் உழக்கோலால் தூண்டுகின்ற எருதுகள் வளைந்து இழுத்த வண்டிகள் ஒன்றோடு ஒன்று நெருங்கித் தேய்வனவாயின, எ - று.

தேறலைத் துவலை - தேறலின் துவலை. (௩உ)

பாய்ந்த தெங்கதின் பழங்கள் வீழ்தலால்
வாய்ந்த வாழைமா வருக்கை ஆசினி
சாய்ந்த தீங்கனி சரிந்த தேன்புனல்
தோய்ந்த வாயெலாம் இனிமை தேய்ந்தன.

(க - ரை.) தேங்காய் நெற்று விழும்போது தாக்கிய மா, பலா, ஆசினிப்பலா, வாழைக்கனி ஆகியவைகளிலிருந்து வீழ்ந்த தேனாகிய நீர் தோய்ந்த இடங்களெல்லாம் இனிமை தோய்ந்தன.

(பொ - ரை.) உயர்ந்த தெங்கம் பழங்கள் வீழ்ந்து தாக்குதலால் உயர்ந்த ஆசினிப் பலா, பலா, மா, வாழை

ஆகியவற்றிலிருந்து வடிந்த இனிய கனிகளிலிருந்து மிக்குப் பொழிந்த தேனீர் தோய்ந்த இடங்களெல்லாம் இனிமை தங்கின எ - று. (௩௩)

வளைந் தளித்திடும் கடலின் வாழ்வளை
உளைந் தளித்தமுத் தொருங்கு மற்றெலாம்
திளைந் தளித்தலின் திருஎன் றுண்டகை
விளைந் தளித்தவை விருந்தேன் றும்அரோ.

(க - ரை.) கடல் முத்து முதலியவற்றை அந் நாட்டினர் மிகுதியாய்ப் பிறர்க்கு வழங்குதலின் இறைவனருளிய யாவற்றையும் விருந்திற்கு ஆக்குவது புலனாகும்.

(பொ - ரை.) உலகினைச் சூழ்ந்து தண்ணளி செய்யுங் கடலில் வாழ்கின்ற சங்கு வயிறளைந்து ஈன்றளித்த முத்துக்களையும் மற்றும் எல்லாவகைப் பொருள்களையும் ஒருங்கே அன்பொடு மகிழ்ந்து வழங்குதலினால், செல்வமென்று விரும்பி ஆண்டவனால் வழங்கப் பெற்றவை யாவும் பிறர்க்கு வழங்கும் விருந்து என்றே ஆகும் எ - று. (௩௪)

பொறையி னோடிகல் பொதிர்ந்த பொன்மணி
உறையி னோடிகல் உவந்தி டுங்கொடை
மறையி னோடிகல் முனிவர் மாண்புவான்
முறையி னோடிகல் முயன்ற நாடெலாம்.

(க - ரை.) மணியும் பொன்னும் மலைபோலும். மகிழ்ந்த கொடைகள் மழைபோலும், முனிவர் மாண்பு மறை போலும். நாட்டின் நீதி வானுலக நீதிபோலும்.

(பொ - ரை.) பொன்னும் மணியும் பொற்றை (மட்சிறுமலை)யினோடு இகலுதலாய்க் குவிந்தன. மகிழ்ந்த வழங்குங் கொடைகள் மழையினோடு மாறுகலாய் ஒங்கின. முனிவரின் நற்பண்புகள் வேதத்தோடு இகலி யோங்கின. வளம் பெற முயன்ற நாடுகளிலெல்லாம் நீதிநெறி வானுலக முறைகளோடு வீப்புகொண்டு மிளிர்ந்தன எ - று.

உறை - மழைத்துளி. ஈண்டு மழையைக் குறித்தது. வரையாது கொடுத்தற்கு மழை உவமை. மணிக்கும் பொன்னுக்கும்

வரை உவமை. மக்கள் நீதிக்கு வானநீதி உவமை. முனிவர் மாண்புக்கு மறை உவமை. பொறை - பொற்றை. "அறையும் பொறையும் ஆரிடை மயக்கமும்" என்பது சிலப்பதிகாரம். பொறை என்பது பொற்றை. அஃதாவது மட்சிறு மலை. "பொச்சை வெஞ்சுரம்" என்பது கல்வெட்டு. பொற்றை பொத்தையாகிப் பொச்சை என்றும் ஆகும். (கூ௫)

காமலர் பேடைதழீஇ அன்னம் கண்படும்
தேமலர்த் தடந்தழீஇ சினைகள் நீடிய
பூமலர்ப் பொழில்தழீஇப் பொலிந்த பொற்பெழுந்
தூமலர் வயல்தழீஇத் துளங்கும் நாடதே.

(க - ரை.) தடாகம் தேன்மலரணைந்தும் பொழில் பூமலர் தழுவியும் வயல்நீர் தூமலர் தழுவியும் அசையாநிற்பக் காமப் பெடையைத் தழுவி அன்னச்சேவல் கண் துயிலும் நாடு அதுவே.

(பொ - ரை) நீர்த்தடாகங்கள் அன்னம் கண்படும் தேன் மலர்களைத் தழுவி அலைவீசித் துளங்க, கிளைகள் ஓங்கிய பொழில்கள் பூமலர்களைத் தழுவி அசைய, வயல்நீர் பொலிவுபெற்ற அழகு நிரம்பிய தூயமலர்களைத் தழுவித் துளங்குகின்ற நாடு அந்தச் சூதேய நாடேயாகும் எ - று.

காம் மலர்பெடை - ஆசைமிகுந்த பெடையை. கண்படும் - உறங்கும். (கூ௬)

ஓலைகள் கிடந்தநீள் கமுகொ டும்பனை
பாலைகள் மாமகிழ் பலவு சுள்ளிகள்
கோலைகள் சந்தனம் குங்கு மம்பல
சோலைகள் கிடந்தன தொகுப்ப வொண்ணுமோ.

(க - ரை.) கமுகும் பனையும் பாலை மரங்களும் மா, மகிழ், பலா, மரா, இலந்தை, சந்தனம், குங்குமம் முதலிய மரங்கள் உள்ளன; அவை தொகுத்துக் கூறவொண்ணாதவாறு மிக்குள்ளன.

(பொ - ரை.) ஓலைகள் பொருந்திய கமுகும் பனையும் ஆகிய புல்லினங்களும், பாலை மா மகிழ் பலவு மரா இலந்தை சந்தனம் குங்குமம் முதலிய பல மரவகைகளும் மிக்க சோலைகள் இருந்தன. அவைகள் தொகுத்துக் கூற அளவு படும் வண்ணத்தன அல்ல எ - று.

பாலேகள் - பாலே மரங்கள். இவற்றின் பழங்களைத் தின்பது வழக்கம். மா - மாமரம். மகிழ் - மகிழ மரம். சுள்ளிகள் - மரா மரங்கள். கோல் - இலந்தை. கோலே என்று ஐகாரச் சாரியை பெற்று வந்தது. (கஎ)

தேன்வளர் அலங்கலேச் சிறைசெய் கூந்தலோ
கான்வளர் சண்பகம் மலர்ந்த காவுகள்
வான்வளர் துளிநலம் வழங்கும் கொண்டலோ
தேன்வளர் ஒலிகோடு தேன்பெய் சோலேயே.

(க - ரை.) சண்பகப் பூஞ்சோலேகள் பூமாலேகள் அணிந்த கூந்தல்களோ? தேன்மழை பொழிகின்ற சோலேகள் மழை வழங்குகின்ற மேகங்களோ?

(பொ - ரை.) நறுமணம் மிகுகின்ற சண்பகப் பூக்கள் மலர்ந்த சோலேகள் தேன்மிக்க பூமாலேகளே அணிந்த கூந்தல்களோ? தேனினங்களாகிய வண்டுகள் இரைகின்ற ஒலியொடு தேனேப் பெய்கின்ற சோலேகள் வானில் உண்டா கின்ற மழைத்துளியாகிய பயனே வழங்குகின்ற மேகங் களோ? எ - று.

அலங்கல் - மாலே. தேன் - வண்டு. (கஅ)

தோடணி கவினேடு தூங்குங் குண்டல
நீடணி மதிமுக நிழல்செய் மாதரோ
கோடணி எழுதருங் கோலப் போதோடு
சேடணி கனிநலங் திளேத்த சோலேயே.

(க - ரை.) கொம்புகளே அழகு செய்கின்ற பூக்களும் தொங்குகின்ற கனிகளும் மலிந்த சோலேகள் தோடுகளும் குண்ட லங்களும் அணிந்த மதிமுக மங்கைமார்களோ?

(பொ - ரை.) கோடுகளே அணிசெய்யும் எழுதுதற்கு அரிய அழகிய மலர்களோடு திரட்சி பொருந்திய கனிகளின் வனப்பும் நிறைந்த சோலேகள் பொற்ருேடு அணிந்த அழகினேடு தொங்குகின்ற குண்டலங்களும் பிற மிகுந்த அணிகளும் அணிந்த மதிமுகம் ஒளிசெய்கின்ற மாதர்கள் தாமோ? எ - று.

மலர்களும் கனிகளும் அணிந்த கொம்புகள் தோடுகளும் குண்டலங்களும் அணிந்த பூங்கொம்பு போன்ற மதிமுக மங்கை யரை ஒத்தன. (கக)

நீல்நிரைத்து எழுதிய படத்தின் நேர்உடு
மேல்நிரைத்து எழுதிய விசும்பின் தோற்றமோ
கானிரைத்து எழுந்தளிர்க் காழகத்து உயர்
தேனிரைத்து அவிழ்மலர் திளைத்த சோலையே.

(க - ரை.) கானச் சோலையின் தளிராகிய நீல ஆடையின் மேல் மலர்ந்த வெண்மலர்ப் பரப்பு, நீலநிறத்தால் ஒழுங்கு படுத்தி எழுதிய ஓவியத்தின்மேல் வரையறை செய்து எழுதிய விண்மீன்கள் மலர்ந்த நீல வானவெளியின் தோற்றந்தானோ?

(பொ - ரை.) கானச் சோலையின் வேலியின்மேல் வேய்ந்து தளிர்த்துள்ள தளிராகிய நீல ஆடையின்மேல் சிறந்த தேன்துளிகளை நிரல்படக்கொண்டு மொட்டவிழ்ந்த மலர்கள் மிக்க சோலைகள், நீல நிறத்தால் ஒழுங்குபடுத்தி எழுதிய ஓவியத்தின்மேல் எழுதப்பட்ட விண்மீன்களை யுடைய நீல வானவெளியின் தோற்றந்தானோ? எ - று.

காழகம் - நீல ஆடை. (௪0)

அப்புறத் தமுதணுஞ் சிறைப்போற் பார்ந்தபுள்
இப்புறத் தலர்கள்கோய் இளைஞர் வாண்முகம்
முப்புறத் தெழுதிய முகைகள் காட்டிய
துப்புறச் சித்திரக் கூடம் சோலையே.

(க - ரை.) நாற்சதுரச் சோலையில் உட்புறம் கனியுண்ணும் பறவைகள். வெளி நாற்புறங்களில் ஒருபக்கம் மலர் கொய்யும் இளைஞர்களின் ஒளியுள்ள முகம். மற்ற முப்புறத்தும் கூடத்தில் எழுதிய மலர் முகைகள் போன்ற முகைகள். ஆகவே, சோலை சித்திரக்கூடம் போன்றது.

(பொ - ரை.) சோலையின் அப்புறத்து (உட்புறத்தில்)க் கனியமுதுண்ணும் சிறகினையுடைய அழகு நிறைந்த பறவைக் கூட்டங்களும், காணும் முன்பக்கத்தில் மலர்கள் கொய்கின்ற இளைஞர்களின் ஒளியமைந்த முகங்களும்,

மற்ற மூப்பக்கத்திலும் எழுதப்பட்ட முகைகளும் காட்டிய பொலிவுமிக்க சோலை இவற்றை எழுதிய சித்திரக்கூடம் போன்றது எ - று. (சக)

கயிற்றுணை கலனெனக் கம்பில் தூங்கலர்
குயிற்றுணை குயிலவுங் குழல்வண் டூதவும்
மயிற்றுணை யுலவிவந் திரட்ட மற்றெலாம்
பயிற்றுணை களிமணப் பந்தர் சோலையே.

(க - ரை) துணைக்குயிலின் கழுத்தில் பூச்சரம் மங்கலப் பொன்னாண்போல் குயிலவும் வண்டு குழலூதவும் மயில் உலவி வந்து அகவவும் மற்றப் பறவைகள் வந்து அகவவும் சோலை மணப் பந்தர்போல் விளங்கிற்று.

(பெ - ரை.) பின் கொக்கியோடு இணைக்கப்பட்ட அணிகலன்போல (மங்கல அணிபோல) பூங்கொம்பில் தொங்குகின்ற பூக்கள் துணையாக இணைந்திருக்கின்ற குயில்களில் ஒன்றன் கழுத்தில் மங்கலநாண்போன்று குயிலவும் வண்டு குழல் ஊதவும் துணை மயில்கள் உலாவிவந்து அகவவும் மற்றெல்லாப் பறவைகளும் தத்தம் துணைகளோடு பயிலவும் விளங்குகின்ற சோலை களிப்புமிக்க திருமணப் பந்தர் போன்றது (எ - று.)

கொம்பில் தொங்குகின்ற பூச்சரம், இளவேனிற் காலத்தில் மகிழ்கின்ற குயிற்பேடைக்குக் குயிற்சேவல் பூச்சரத்தால் மங்கல அணிகலன் பூட்டியதுபோலும் என்க. பூங்கொம்பினை மண மகளாகக்கொண்டு பூச்சரத்தை மங்கல அணிகலன் என்றுரைத் துக் "குயில்கள் குயில" என்பதற்குக் குயில்கள் கூவ என்றும் உரைக்கலாம். (சரு)

முதிர்செயுங் கனிமலர் மொய்த்துத் தூங்கலோ
முதிர்செயும் பழந்துணர் ஒளிசெய் குப்பையால்
கதிர்செயும் முடிகலன் கழித்து மன்னவர்
போதிர்செயும் துறவிடம் போலும் சோலையே.

(க - ரை.) பழமும் பூந்துணரும் ஒளிசெய் குப்பையாக உதிர்ந்துள்ள இடம், முடிகள் அணிகலன்கள் ஆகியவற்றைத்

துறந்து அரசர்கள் தம் நிலையில்மட்டும் நிற்கின்ற துறவற வழி நிலை போன்றது சோலை.

(பெ - ரை.) முதிர்ந்த கனிகளும் மலர்களும் மொய்த்துத் தூங்க, உதிர்ந்து கிடக்கின்ற பழங்களும் பூந்துணர்களும் ஆகிய ஒளிசெய்கின்ற குப்பைகளையுடைய இடம் ஒளிவிடுகின்ற முடிகள் அணிகலன்கள் ஆகியவற்றைக் களைந்துவிட்டு அரசர்கள் துறவு மிகுதல் செய்கின்ற இடங்களையே போலும் சோலைகள் (எ - று.)

துறப்போர் துறப்பத் துறவாதவர் முடிசூடி இலங்குவது போலப் பல கொம்பர்கள் கனியும் மலரும் மிகுதியாய் அணிந்து கொண்டு விளங்கின என்பது நயம். (சங)

வால்நிறத் தகரினம் கலையின் மானினம்
தூநிறத்து உயரிய தூரியத்து இனம்
நீல்நிறப் பகட்டினம் நெடிது உழற்றலின்
கோல்நிறச் சிலம்பநற் கூடம் சோலையே.

(க - ரை.) வெள்ளைநிற ஆட்டுக் கடாக்களும் கலைமான்களும் பொலி காளைகளும் எருமைக் கடாக்களும் நெடுங்காலம் தம்முட் போர் செய்தலினாலே சோலைகள் சிலம்பப் போர்க் கூடம் போன்றது.

(பொ - ரை.) வெண்ணிற ஆட்டுக் கடாக்களின் கூட்டமும், கலைமான்களின் இனமும் தூயநிறத்தையுடைய பொலி எருதுகளின் கூட்டமும், கரிய நிறத்தையுடைய எருமைக் கடாக்களின் கூட்டமும் நெடுங்காலம் போர் செய்தலால் சிலம்பக் கோல்களின் வண்ணமாகக் காணப்படுகின்ற சிலம்பப் போர்க்கூடத்தைப் போன்றது அச் சோலைகள் (எ - று.)

கோனிற என்பதைக் கோன் இற என்று பிரித்து அரசன் அழிய என்றும், கோன் நிறம் - அரசனது புகழ்என்றும் கூறுப. (சச)

கருகரு வெனவோர்பால் காடைப் புள்ளினம்
ஞருஞரு வெனவோர்பால் நயந்த தோகைகள்
புருகுரு வுதலோடு புள்பல வோதையால்
அருதுஉரு உணர்வுகும் அரங்கஞ் சோலையே.

(க - ரை.) பறவைக் கூட்டங்களின் ஆரவார ஓசைகள் பள்ளிக்கூடப் பாலர்கள் அரங்கில் ஓதும்போது எழுகின்ற ஒலி வகைகளை யொத்தன.

(பொ - ரை.) காடைக் கூட்டம் ஒருபக்கம் கரு கரு என இசைக்கவும், விருப்பங்கொண்ட மயில்கள் ஒருபக்கம் ஞரு ஞரு என அகவவும், புறாக்கள் குறுவவும் மற்றும் பல புள்ளினங்கள் ஓசை எழுப்பவும் பலவகையாக மிகுகின்ற ஓசையால் இதற்கு முன்பு அசையாத கல்வி யுணர்வுகளை இடையறாது பரப்புகின்ற பாலர் அரங்கத்தைப் போன்றன சோலைகள் எ - று.

'அறாதஉறா உணர்வு உகும்' உறா உணர்வு - இதற்கு முன்பு உறாத (அடையாத) கல்வி உணர்வினை, அறாது - இடையறாது. (சங)

மேல்வளர் அலர்ப்படம் விரித்து வீணைசெய்
பால்வளர் சுரும்பிசை பாட மாங்குயில்
வால்வளர் மயில்நடம் காண மற்றைப்புள்
சால்வளர் நாடக சாலை சோலையே.

(க - ரை.) மாங்குயில் பாட வண்டு வீணைமீட்ட மயில் நடனம் ஆட மற்றப் பறவைகள் காண்கின்ற சோலை நாடக சாலையே.

(பொ - ரை.) கொம்பரின்மேல் மொக்கலர்ந்த பூம் படாம் விரித்து இன்பம் வளர்கின்ற வீணையொலி செய்கின்ற வண்டுகளையும், மாங்குயில்கள் இசைபாடத் தோகை வளர்ந்த மயில்கள் ஆடும் நடனத்தையும், மற்றப் பறவையினங்கள் பார்க்க நாடகக் கலைகள் மிகுதியாக விளங்குகின்ற நாடகசாலையே போலும் சோலைகள் எ - று.

மாங்குயில் பாட வீணைசெய் சுரும்பினையும் மயில் நடனத்தையும் மற்றைப்புள் காண என்று கூட்டுக. சால்வளர்-மிக வளரும்.()

காலெடுத் தடுத்தெதிர்த் தொளிக்க லாபநீள்
வாலெடுத் துப்பக மாற மஞ்ஞைகள்
கோலெடுத் தஞ்சனக் கோலக் காருகம்
மேலெடுத் தாரியக் கூத்து வீக்குமால்.

(க - ரை.) மயில் முறைமுறையாக மாறி எதிராட அஞ்சனக் கோலக் கருங்குரங்கு கோலெடுத்துக் கிளையிலேறி ஆரியக் கூத்தாடும்.

(பொ - ரை.)* காலை எடுத்து வைத்து ஒன்றையொன்று அடுத்து எதிர்த்து, ஒளியுள்ள தோகை நீண்ட மயில்கள் அத்தோகையை உயர்த்து விரித்து முறையாக மாறி மாறியாட, அஞ்சன மைபோன்ற கரியகோலக் கருங்குரங்குகள் கோலெடுத்துக் கிளைகளின்மேல் ஏறிநின்று முறை முறையாக மாறி மாறி ஆரியக் கூத்து ஆடுகின்றன.

காருகம் - கருங்குரங்கு. ஊகம் - குரங்கு. கருமை + ஊகம் = காரூகம்: பண்புத்தொகை. ஊகார நெடில் குறுகிற்று. (சஎ)

கூடநின் றேடைதன் குவளைக் கண்டிறந்
தோடநின் றலைந்தலைந் தொருமித் தோரிடம்
நாடலின் நகைத்தென நளைத்த முல்லைநீ
டாடலின் ஆவித்தென் றலர்ந்த காந்தளே.

(க - ரை.) நீர்த் தடாகமும் குவளைக்கண் விழித்துப் பார்த்துத் தானும் கூத்துப்பார்ப்பதற்கு இடம் தேடிப் புறப்படுவது போல அலைந்து அலைந்து நெருங்கி மோத இடங்கிடையாதென்று கண்ட முல்லை கரையில் நின்று சிரிக்கக் கூத்து நெடுநேரம் பார்த்து அலுத்துக் கொட்டாவி விடுவதுபோல் காந்தட் பூக்கள் மலர்ந்தன.

(பொ - ரை.) அந்தச் சோலையைச் சார்ந்த நீர்த் தடாகமும் பார்ப்பவரோடு உடன்நின்று காண விரும்பித் தன் குவளை மலர்களாகிய கண்களைத் திறந்து பார்த்துச் சோலைக்கு ஓட அவாவி நின்று வழி கிடையாமையின் அலைந்து அலைந்து ஒருமைப்பாட்டுடன் தானும் சோலையிற் போய்த் தங்கியிருக்க ஓரிடம் ஆராய்தலினால், அதனை முன்னர் இடம்பெற்ற முல்லை கண்டு அதற்கு இடமின்மை கருதிச் சிரிப்பதுபோல் அரும்பின. சோலையில் நிகழும் கூத்து நெடிது ஆடுதலினால் காண்போர் சோர்ந்து கொட்டாவி விட்டனரென்று கூறும்வண்ணம் காந்தட் பூக்கள் மலர்ந்தன என்பது.

ஆவித்தல் - கொட்டாவி விடுதல். (சஅ)

தோகைகொள் மயிலென மாதர் தோன்றலின்
வாகைகோண் டாரென மயிலோ டுங்கலால்
சாகைகோண் டேனையபுள் சிரித்த தன்மைபோல்
ஓகைகோண் டோலிதர ஒலிக்கும் நாடெலாம்.

(க - து.) அச்சோலைக்கு மயிலியல் மாதர்கள் வர, அவர்களின் அழகுக்குத் தோற்ற மயில் அவர்கள் வென்ருரென்று நாணியொடுங்க, அதுகண்டு சிரிப்பதுபோல் பறவைகள் ஒலி செய்யும் அங்நாட்டுச் சோலையிடங்களெல்லாம்.

(பொ - ரை.) தோகைகொண்ட மயிலைப்போல் அச் சோலையில் மாதர்கள் தோன்றுதலினுல், அழகினுல் தம்மை வென்று அவர்கள் வெற்றி கொண்டனர் என்று மயில்கள் நாணியொடுங்க, அதுகண்டு மரக்கிளைகளை இருப்பிடமாகக் கொண்டு மற்றப் பறவைகள் சிரிக்கின்ற தன்மைபோல மகிழ்ச்சி கொண்டு ஒலிக்க அவ்வாறே அங்நாட்டுச் சோலைகளெல்லாம் ஒலிக்கும் என்பது.

சாகை - மரக்கிளை. ஏனைய என்பது ஏனைய என்ருயிற்று; குறக்கல். (சக)

உதித்தன கதிரென உவந்த மாங்குயில்
துதித்தெனப் பாடியோண் ணனந்தன் றூய்நடை
விதித்தென முன்னடந் ததுதம் மெல்லடி
பதித்தென நடந்தனர் பனிகோள் கோதையர்.

(க - ரை.) வந்த மகளிரை ஞாயிற்றின் கதிரென உவந்த குயில் போற்றுவதுபோல் பாட அன்னம் நடை படிப்பிப்பது போல் முன்னடக்க அங் நடையைப் பதிப்பதுபோல மாதர் நடந்தனர்.

(பொ - ரை.) மங்கையர் வந்ததனுல் இருண்ட சோலையில் செங்கதிர்கள் தோன்றின என்று உவந்த மாங் குயில்கள் பாட ஒள்ளிய அன்னப்பறவை தமது தூய நடையைப் படிப்பிப்பதுபோல் நடக்க அங்நடையையே பதித்தாற்போல குளிர்ந்த மலர்மாலை யணிந்த மங்கையர் நடந்தனர் என்பது. (௫0)

இன்னிறப் பிறைக்கதிர் திரட்டி யீட்டெனப்
பன்னிறத் தலர்ந்தபூப் படர்ந்த காவிடைக்
கொன்னிறத் தலர்ந்தெனக் கொய்து கொய்துதாம்
மின்னிறத் தடவிசூழ் விரும்பி ஏகுவார்.

(க - ரை.) செங்கதிர் வந்தாற்போல மங்கையர் வந்த அச் சோலையில் வெண்கதிர்த் திரள்போல மலர்ந்த மலர்களைப் பயனில்லாத வெண்மை பூத்தது என்று கொய்வதுபோலக் கொய்து கொய்து சென்றனர் மங்கையர்.

(பொ - ரை.) இனிய நிறமுள்ள பிறைநிலாவின் கதிர்களைத் திரட்டிய தொகுதியென்று கருதுமாறு, பலவகை நிறத்தொடு மலர்ந்த பூக்கள் பரந்த சோலையில், மகளிர் இவைகள் வீணான நிறத்தொடு அலர்ந்தன என்று கொய்வதுபோல் கொய்து கொய்து, மின்னல்போன்ற நிறத்தொடு சோலையைச் சுற்றி விரும்பித் திரிவாராயினர் என்பது. (ருக)

கொள்ளைகண் டளியினங் கூவென் னோதையும்
கிள்ளைகண் டினைவபோல் கீயென் னோதையும்
வள்ளைகொண் டினிதிசை மறலப் பாடினர்
வெள்ளைகொண் டுளபல நிறத்த வீகொய்வார்.

(க - ரை.) மலர் கொள்ளைபோவது கருதி வண்டு கூவுகின்ற கூவென்ற ஓசையும் கிளி கண்டு வருந்துவதுபோல் கீ என்று கத்துகின்ற ஓசையும் மயங்க மலர் கொய்யும் மகளிரும் வள்ளைப் பாடலைப் பாடினர்.

(பொ - ரை.) மலர்களை மகளிர் கொள்ளையடிக்கின்றனர் என்று கண்ட வண்டுகள் கூவென்று இரைகின்ற ஓசையொடும் கிளிகளும் பார்த்து வருந்துவனபோல் கீ என்று கத்துகின்ற ஓசையொடும் சென்று இசை மாறுபட்டுக் கலக்கும்படி வெள்ளைநிறங் கொண்டுள்ள பலவகை மலர்களையும் கொய்கின்ற மகளிர் பலரும் வள்ளைப்பாடலை மேற்கொண்டு இனிது பாடினர் என்பது.

வள்ளை - மகளிர் நெற்குற்றும்போது பாடும் பாடல். (ருஉ)

ஐம்மணி பவளமுத் தம்போ னிற்றெலாம்
பம்மணி பெறவரும் படலை கோத்தெனப்
பொம்மணி மலரெலாம் புணர்பொன் னூலினால்
தம்மணி யிணையெனத் தார்பி ணிக்குவார்.

(க - ரை.) மணியும் பவழமும் முத்தும் பொன்னும் கோத்தாற் போல அழகிய மலர்களையெல்லாம் பொலிவுள்ள நூலால் தங்கள் அழகுக்குப் பொருத்தமாக மாலைகளாகக் கட்டுவார்கள்.

(பொ - ரை.) அழகிய மணி பவழம் முத்து உயர்ந்த பொன் ஆகிய இவையெல்லாம் பொருந்த அழகுமிக அரிய பொன்மணி மாலை கோத்தாற்போல, மிகுந்த அழகிய மலர்களையெல்லாம் பொருத்தமான அழகிய நூலினால் தம் அழகுக்கு இணையான மாலையாகக் கட்டுவார்கள். (௫௩)

பிணித்ததார் விரலின்மேல் பிரளக் காட்டுவார்
அணித்தகா துனதென இசலி ஆர்த்தபின்
தணித்தபூண் ஒண்கலம் சவிக்கி வுத்தங்கள்
பணித்தபூம் புகைக்குழல் படியச் சூடுவார்.

(க - ரை.) தொடுத்த மாலையை விரல்களிற் சுற்றிக்காட்டி உனது மாலையின் அழகு போதாது என்று கூறி மாறுபாடு கொண்டு முழங்கிய பின்பு மார்பிலும் மணிக் கட்டிலும் கூந்தலிலும் சூடுவாராயினர்.

(பொ - ரை.) அவரவர் தொடுத்த மாலைகளை விரல்களின்மேல் சுற்றிக் காட்டி உனது மாலையின் அழகு போதாது என்று சொல்லி முரண்பாடுகொண்டு ஆரவாரித்த பின்பு தொங்குகின்ற அணிகலன்கள் அணிந்த ஒளியுள்ள மார்பிலும் அழகிய மணிக்கட்டிலும், கூந்தலிலும் சூடுவாராயினர் என்பது.

அகலம் என்பது முதற் குறையாய்க் கலம் என்று நின்றது. (௫௪)

முருகுவிம் மியமலர் குடைந்து மூழ்குதேன்
பருகுவிம் மியவளி பசித விர்ந்தபின்
அருகுவிம் மியதென அலர்கோய் மங்கையர்
உருகுவிம் மியகளிப் புயிர்த்துப் பாடுவார்.

(க - ரை.) மலர்த்தேனுண்டு பசி தவிர்ந்தபின் வண்டு பாடுவதுபோல மனமுருகிய மங்கைமார்களும் களிப்பு மீக்கூர்ந்து பாடினர்.

(பொ - ரை.) நறுமணம் நிரம்பிய பூக்களைக் குடைந்து அவற்றினுள்ளே மூழ்கியிருக்குந் தேனைப் பருகுகின்ற செறிந்த வண்டினங்கள் பசிநீங்கிய பின்பு பக்கத்தில் முரன்று பாடியதுபோல, மலர் கொய்கின்ற மங்கைமாரும் மனம் உருகி நிறைந்தெழுந்த களிப்பினொடு மூச்செறிந்து பாடுவாராயினர் என்பது.

முருகு - நறுமணம். அளி - வண்டு. (௩௩)

பூமலி சேக்கைமேல் பொலிந்து நூற்படி
பாமலி பதத்தறம் பழிச்சிப் பங்கயத்
தேமலி சேக்கைமேல் சிறந்த ஓதிமம்
நாமலி இனிதிசை நாணப் பாடுவார்.

(க - ரை.) தாமரைத் தவிசின்மேல் வீற்றிருக்கும் அன்னங்கள் நாண மலரமளியின் மேலிருந்து அறத்தைப் போற்றிப் பாடுவாராயினர்.

(பொ - ரை.) பரப்பிய மலர்கள் மலிந்த மெத்தையின் மேல் அழகாக இருந்து, நூலின்படியே பாக்களில் நிரம்பிய சொற்களால் அறத்தைப் போற்றித் தேன்மலிந்த தாமரை மலராகிய மெத்தையின்மேல் இருக்கின்ற சிறந்த அன்னப் பறவைகளின் நாவிற் பிறந்த மிக்க இனிதாகிய இசையும் நாணப் பாடுவாராயினர்.

பழிச்சி - போற்றி. ஓதிமம் - அன்னம். (௩௪)

ஆம்பல்வாய் நறும்விரை அவிழ்த்து விள்ளிய
ஆம்பல்வாய் மலர்ந்தன அணங்கை யாரினிது
ஆம்பல்வாய்க் குரலுட ளுய்ந்து வெண்மதி
ஆம்பல்வாய் திருந்துணர் வறைந்து பாடுவார்.

(க - ரை) தேன்வழியே மணம் பரப்பும் ஆம்பல் மலர் போன்ற வாயுள்ள மகளிர் வீணையி னிசையோடொப்ப ஆய்ந்து வெண் மதியின் ஒளிபோல் தெளிந்த உணர்வுகளைப் பாடுவார்.

(இ - ள்.) ஆம்பல் - தேனின், வாய் - வழியாக, நறும் விரை - நறுமணத்தை, அவிழ்த்து - பரப்பி, விள்ளிய - மலர்ந்த, ஆம்பல் - ஆம்பல் மலர்போன்ற, வாய் - வாய்கள், மலர்ந்தன - மலர்ந்த, அணங்கையர் - மாதர், இனிது - இனிதாய், ஆம்பல்வாய் - வீணையினிடத்து உண்டாகும், குரலுடன் - ஓசையைப்போல், ஆய்ந்து - ஆராய்ந்து, வெள்- வெள்ளிய, மதி - நிலாவின், ஆம்பல் - ஒளி, வாய் - பொருந்திய, திருந்து - திருந்திய, உணர்வு - உணர்வுகளை, அறைந்து - சொல்லி, பாடுவார் - பாடுவார்.

(பொ - ரை.) தேனின் வழியாக நறுமணத்தைப் பரப்பி மலர்ந்த செவ்வாம்பல் மலர்போன்ற வாய் மலர்ந்த மாதர்கள் இனிமையாய் வீணையொலியோ டொப்ப ஆராய்ந்து வெண்ணிலாவின் ஒளிபோல் திருந்திய உணர்வு களைச் சொல்லிப் பாடுவார் என்பது.

ஆம்பல் - தேன். ஆம்பல் - செவ்வாம்பல் மலர். ஆம்பல் - வீணை. ஆம்பல் - ஒளி. (கஎ)

வேறு

விண்புதைத்த மலர்ப்பணைவாய் விரைகுளித்த தேனொழுகிக்
கண்புதைக்கும் இருட்பொழில்கோள் களிகூர்ந்த நாடிதுவே
களிகூர்ந்த நாடிதுவேல் கண்கடந்த கவின்நாடி
நளிகூர்ந்த நயனல்கும் வானுலகம் நாடேமோ.

(க - ரை.) மலர்க் கொம்புகளிலிருந்து நறுமணம் தோய்ந்த தேனொழுகச் செய்து கண் மறைக்கும் இருண்ட சோலைகள் கொண்ட களிப்பு மிக்க நாடிதுவே என்றால் கண் கடந்த கவின் மிகுந்து, மிக்க இன்பம் நல்கும் வான் உலகத்தை விரும்ப மாட் டேமோ?

(பொ - ரை.) விண்ணை மறைத்த மலர்க் கிளைகளி லிருந்து நறுமணம் படிந்த தேனை ஒழுகச்செய்து, கண்ணை மறைக்கும் இருளையுடைய சோலைகளைக் கொண்ட களிப்பு மிகுந்த நாடு இதுவே; இங்ஙனம் களிகூர்ந்த நாடு இது வென்றால் கண்கடந்த அழகை விரும்பச் செய்து பெருமை

மிக்க இன்பத்தைத் தருகின்ற வானுலகத்தை விரும்ப மாட்டேமோ? என்பது. (ருஅ)

நிழல்சூழ்கும் பூம்பொழிற்கண்
நிறம்-மது-கான் இன்பமலால்
குழல்சூழ்கும் இசைதுவைப்பக்
கோடருஞ்சீர் நாடிதுவே
கோடருஞ்சீர் நாடிதுவேல்
கோதேனக்கோள் புறத்திமைப்ப
வாடருஞ்சீர் மல்கியெழும்
வானுலகம் நாடேமோ.

(க - ரை.) மெய் வாய் கண் மூக்குச் செவியாகிய ஐந்தற்கும் நிழலும் தேனும் நிறமும் மணமும் இசையும் ஆகிய இன்பம் வழங்கும் சோலையுள்ள நாடிதுவேல் கோள் மீன் இமைக்கும் வாடாச்சீர் வானுலகத்தையும் நாடமாட்டோமா? (கான்-மணம்.)

(பொ - ரை.) நிழலில் சூழ்கச்செய்யும் பூஞ்சோலையினிடத்தில் நிறமும் தேனும் மணமும் ஆகிய இன்பமேயன்றிக் குழலிசையை சூழ்கச்செய்யும் பறவைப் பாட்டின் இசை பொலிக்கக் குறையாத புகழுடைய நாடு இதுவே. அங்ஙனம் குறைதலில்லாத சீருடைய நாடு இதுவேயானல், குறையென்று கருதிக் கோள்மீன்களை உள்ளே இருக்கவொட்டாமல் புறத்தே இமைக்கச் செய்து வாடுதலில்லாத சிறப்பு மிகுந்து ஓங்குகின்ற வானுலகத்தை நாடாமலிருப்போமா? (நாடுவோம் என்பது).

ஐம்புல இன்பத்திலும் மேம்பட்ட இன்பம் வானுலகில் உண்டு என்று கூறினர். நிழல் மெய்க்கும் நிறம் கண்ணுக்கும் தேன் நாவுக்கும் மணம் மூக்குக்கும் இசை செவிக்கும் இன்பம் பயக்கும் என்க. (ருக)

படநாகம் தோலுரித்த பான்மையின்கல் லூடுரிஞ்சித்
தடநாகம் தூங்கருவி தாவழகார் நாடிதுவே
தாவழகார் நாடிதுவேல் தரங்கமிலா தருட்பவ்வம்
வாவழகார் திருநிலைத்த வானுலகம் நாடேமோ?

(க - ரை.) நாகம் தோலுரித்த இயல்புபோல கற்களினூடு உரிஞ்சப்பட்டு மலையிலிருந்து தூங்குகின்ற அருவிதாவி விழுகின்ற நாடு இதுவானால், அலைகள் இல்லாத அருட்கடல் பரவிய அழகு நிரம்பிய செல்வம் நிலைத்த வானுலகத்தை விரும்பமாட்டோமா?

(பொ - ரை.) படத்தையுடைய நாகம் தோலுரித்த பான்மையைப்போலக் கற்பரப்பினூடு உரிஞ்சிப் பெரியமலையாகிய தடநாகத்திலிருந்து தூங்கி விழுகின்ற அருவி தாவி வருகின்ற அழகு நிரம்பிய நாடு இதுவே; அங்ஙனம் அழகு நிரம்பிய நாடு இதுவென்றால் அலை இல்லாமல் தாவி வருகின்ற அருட்கடலின் அழகு நிறைந்த செல்வம் நிலைத்த வானுலகத்தை நாடாமல் இருப்போமா? என்பது. (சுο)

பகைதீர்ந்து சண்பகத்தின் தண்ணிழற்கீழ் பள்ளிவர
மிகைதீர்ந்து புறத்தேவர்க்கும் வேட்கைசெயும் நாடிதுவே
வேட்கைசெயும் நாடிதுவேல்விரிகாலத் திமிழ்குன்று
வாட்கைசெயும் நிலைமையுள வானுலகம் நாடேமோ.

(க - ரை.) கள்வர் பகையின்றிச் சண்பகத்தின் குளிர்ந்த நிழலின்கீழ்த் துயில் கொள்ளும்படி துன்பம் நீங்கிப் பிறநாட்டவருக்கும் விருப்பம் உண்டாக்கும் நாடிதுவெனின் எக்காலத்திலும் இன்பங் குறையாத வாழ்வைச் செய்யும் வானுலகத்தை விரும்பேமோ?

(பொ - ரை.) புறப்பகை நீங்கிச் சண்பகத்தின் குளிர்ந்த நிழலின்கீழ்த் துயில்கொள்ளும்படியாகத் துன்பம் நீங்கிப் புறநாட்டிலுள்ளவர்க்கும் விருப்பத்தைச் செய்யும் நாடு இதுவே; அங்ஙனம் புறநாட்டவருக்கும் விருப்பத்தைச் செய்யும் நாடு இதுவாகில் எக்காலத்திலும் இன்பங் குன்றாத வாழ்க்கையை வழங்கும் நிலைமையிலுள்ள வானுலகத்தை விரும்பமாட்டோமா?

'உறுபசியும் ஓயாப் பிணியும் செறுபகையும், சேரா தியல்வது நாடு' என்பது குறள். "வெங்கால் வம்பலர் வேண்டிடத் துறையவும்" என்பது புறநானூறு. வாழ்க்கை என்பது எதுகை நோக்கி வாட்கை எனத் திரிந்தது. (சுக)

நக்களவாய் நயன்கோண்ட நாட்டுநலம் நாடியகால்
மக்களவா மேனலங்கோள் வானுலகம் நாடேமோ
வானுலகம் நாடேமேல் மன்னுயிர்மன் நயன்வெஃகக்
கானுலகங் காட்டுநலம் அக்கவலை மாற்றுவதோ.

(க - ரை.) சிற்றின்பங்கொண்ட இந் நாட்டின் நலத்தையும் விரும்பியபோது மக்களின் அவாவுக்கு மேற்பட்ட நலங்கொண்ட பேரின்பமான வானுலக இன்பம் விரும்பமாட்டேமோ? அதனை விரும்பாவிடின் நிலைத்த வுயிர் நிலைத்த இன்பம் விரும்ப அக்கவலையை இந்தக் காட்டுலகம் மாற்றவல்லதோ?

(பொ - ரை.) நக்கத்தக்க அளவினதாய் நன்மையைக் கொண்ட இந்த நாட்டின் நலத்தையும் ஒரு பயன் என்று விரும்பியபோது, மக்களின் ஆசைக்கும் அப்பாற்பட்ட மேன்மையான நலன்களைக்கொண்ட வானுலக இன்பத்தை விரும்பமாட்டேமோ? அத்தகைய வானுலக நிரதிசய இன்பத்தை விரும்பமாட்டோமென்றால், மன்னுயிர்கள் மன்னிய இன்பத்தை விரும்ப, அதனுளதாகிய கவலையைக் காடுசூழ்ந்த இந்த உலகம் காட்டும் நன்மையானது மாற்றத் தக்க தகுதியுடையதோ? (சுஉ)

பண்கனிந்த நரம்புளரிப் பாணிசைகள் பாடலேனக்
கண்கனிந்த கவினல்லார் களிகூர்ந்தின் னதும்பலவும்
தண்கனிந்த தேனிசையால் சாற்றலோடு பலநாளும்
விண்கனிந்த வின்புண்பார் விழைவோங்க அந்நாடே.

(க - ரை.) பாட்டின் பயனால் மண்ணுலகத்திலிருந்தே விண்ணுலக இன்பம் நுகர்வாராயினர்.

இன்னதும் பலவும் என்பதை முதலாகக் கொள்க.

(பொ - ரை.) முன்னர்க் கூறிய இன்ன தன்மையுடையதும் மற்றும் பலவுமாகிய பாடல்களை, யாழ் நரம்புகளை வருடிப் பண்கள் பலவுங் கனியச்செய்த பண்ணிசைகளைப் பாடுவதுபோன்று, கண்ணானது கனிவுகொண்ட அழகு மிகுந்த மகளிர், களிப்புமிக்குக் குளிர்ச்சிமிகுந்த தேனிசைபோல் பாடுதலுடன், பலநாளும் விண்ணிற்

கனிந்த இன்பம் போன்ற இன்பத்தை நுகர்வாராயினர், அந்நாடெல்லாம் விருப்பத்தில் மேம்படும்படியாக என்பது. (கூங)

வேறு

தேயமு ழங்கின ஆலைகள்
பண்டிகள் தேயமு ழங்கினபா
ஆயமு ழங்கின ஆர்புகழ்
சங்குகள் ஆயமு ழங்கினமேல்
பாயமு ழங்கின மேடகம்
மின்புனல் பாயமு ழங்கினநீர்
தோயமு ழங்கின மேதிகள்
தெண்டிரை தோயமு ழங்கிழையார்.

(க - ரை.) ஆலை முழக்கமும் வண்டி முழக்கமும் பாடல் முழக்கமும் சங்கு முழக்கமும் கடாக்களின் முழக்கமும் மின்னலொடு மழைபெய்கின்ற முழக்கமும் மங்கையர் மூழ்குவதால் உண்டாகின்ற அலை முழக்கமும் எருமைகள் படிவதால் உண்டாகின்ற நீர் முழக்கமும் எங்கும் முழங்கின.

(பொ - ரை.) ஆலைகள் தேயும்படியாக முழங்கின; வண்டிகளும் தேய முழங்கின; பாடலாகிய நிறைந்த புகழ்களும் முழங்கின; சங்குகளும் அத்தன்மையாகவே முழங்கின; ஆட்டுக் கடாக்களும் ஒன்றன்மேல் ஒன்று பாய முழக்கம் ஏற்பட்டன. மின்னலொடுகூடிய இடி மழைப் புனல் பெய்ய முழங்கின; ஒலிக்கின்ற அணிகலன்கள் பூண்ட மகளிர் மூழ்குதலால் தெளிந்த நீரலைகளும் எருமையினங்கள் பாய்தலினால் தடாகத்திலுள்ள நீரும் முழக்கம் செய்தன என்பது.

பண்டிகள் - வண்டிகள். மேடகம் - ஆட்டுக்கடாக்கள். மின் - மின்னலையும் இடியையும் குறிக்கும். (கூச)

கான்திரள் சிந்திய சோலையி
பஞ்சேறி கான்மலர் சிந்தியதீந்
தேன்திரள் சிந்திய பூதர
ளஞ்சேறி தீம்புனல் சிந்தியவான்

மீன்திரள் சிந்திய மான
வளஞ்சேறி வேய்மணி சிந்தியபா
லான்திரள் சிந்திய சீரேவை
யுஞ்சேறி யார்பொழில் சிந்தியதே.

(க - ரை.) சோலை மணஞ்சிந்தக் கொம்புகள் மலர் சிந்தப் பூக்கள் தேன் சிந்தக்கொண்டல் புனல் சிந்த வானம் மீன்களைச் சிந்தியதுபோல மூங்கில்கள் முத்துக்களைச் சிந்தப் பசுக்கள் பால் சிந்த மற்றச் சீர்களான எல்லாவற்றையும் சோலை சிந்தியது.

(பொ - ரை.) மிக்க மணத்தைப் பரப்பின சோலைகள்; செறிந்த கிளைகள் மணமுள்ள மலர்களைச் சிந்தின; பூக்கள் இனிய தேன் துளிகளைச் சிந்தின; முகில்கள் முத்துக்களை யொத்த இனிய புனற்றுளிகளைச் சிந்தின; வானம் விண் மீன்களைச் சிந்தியதுபோல மூங்கிற் கூட்டங்கள் முத்துக் களைச் சொரிந்தன; பசுக்கூட்டங்கள் பாலின் துளிகளைச் சிந்தின; நெருங்கிய நிறைந்த சோலை மற்றுமுள்ள எல்லாச் சிறந்த பொருள்களையும் சிந்தியது என்பது.

கான் - மணம். இபம் - கிளைகள். வேய் - மூங்கில். மூங்கில் முத்துக்களைச் சிதறும் என்பதை,

"விடித்தகழை விசைத்தெறிந்த முத்தம்"

என்ற கலிங்கத்துப் பரணியா லறிக. (சுகு)

ஆலையின் வாயுள தேனக
லுந்தரு வார்மலர் வாயுளதேன்
சோலையின் வாயுள தேனோடு
தூறிய தூய்கனி வாயுளதேன்
மாலையின் வாயுள தேனளி
வந்த இருலதின் வாயுளதேன்
வேலியின் வாயுள தேரிய
செங்நெல் விளைக்குவ பாயினவே.

(க - ரை.) ஆலைத்தேன், பூந்தேன், சோலைத்தேன், கனி பொழிதேன், மாலையிலுள்ள தேன், தேனடையிலுள்ள தேன்

ஆகிய இவைகள் வயலிலுள்ள முதிர்ந்த செந்நெற் கதிரை விளை விப்பனவாகப் பாய்வனவாயின.

(பொ - ரை.) ஆலையினிடத்திலுள்ள தேனும் பரவு கின்ற மரங்களிற் பொருந்திய மலர்களிலுள்ள தேனும் சோலைகளிலுள்ள தேனும் சிதறிய தூய் கனிகளிடத்தி லுள்ள தேனும் பூமாலைகளிலுள்ள தேனும், வண்டுகள் தங்கிய தேனிறால்களிலுள்ள தேனும் வயலினிடத்திலுள்ள முதிர்ந்த செந்நெல்லை விளைவிக்கும்படியாகப் பாய்வன வாயின என்பது.

இறால் - தேனடை. (சுக)

பானழ கேநனி காட்டிய பங்கய நானமு யங்கழகே
மீனழ கேநனி காட்டிய விண்டவிர் வீயின மண்டழகே
தேனழ கேநனி காட்டிய தெண்டுளி மாரி செறிந்தழகே
வானழ கேநனி காட்டுப ளிங்கென வாவிவ ழங்கழகே.

(க - ரை.) கதிரவனின் அழகைத் தாமரை மலர்கள் காட்ட விண்மீன்களின் அழகை மலரினங்கள் காட்ட மழைத்துளிகளின் அழகைத் தேன் துளிகள் காட்ட வான வெளியின் அழகினையே மிகவும் காட்டுகின்ற கண்ணாடியைப் போல்வது என விளங் கிற்று, நீர்த்தடாகம் வழங்குகின்ற அழகு.

(பொ - ரை.) நறுமணஞ் சூழ்ந்த தாமரை மலர்களி னழகு கதிரவனின் அழகினை மிகுதியாகக் காட்ட, மலர்ந்து விளங்குகின்ற மலரினங்களின் பேரழகு விண்மீன்களின் அழகினையே நிரம்பக்காட்ட, நெருங்கிப் பெய்கின்ற மழைத் துளியின் அழகைத் தேன் துளிகளின் அழகே சிறப்பாகக் காட்ட வானத்தின் அழகினையே காட்டும் கண்ணாடியைப் போல விளங்கிற்று நீர்த்தடாகம் வழங்குகின்ற அழகு என்பது.

பான் (பானு) - கதிரவன். (சுஎ)

காரோடு நேர்பொரு தும்பொறை
யேபொழி காரோடு கைபொருதும்
தாரோடு நேர்பொரு துங்கல
னேதட மாரோடு தார்பொருதும்

பாரோடு நேர்பொரு துஞ்சக
டேநளிர் பாலொடு பாபொருதும்
சீரோடு நேர்பொரு தும்பொழி
லேசெழு வீடொடு சீர்பொருதும்.

(க - ரை.) மலை மேகத்தொடு பொருதும்; பொழிகின்ற முகிலோடு பொருதும் கைகள்; அணிகலன்கள் மாலைகளோடு பொருதும்; பெரிய மார்பொடு மாலைகள் பொருதும்; வண்டிகள் பூமியொடு பொருதும்; பாடல்கள் பாலோடு பொருதும்; நாடு சிறப்பொடு பொருதும்; செல்வங்கள் வீட்டுச்செல்வங்களோடு பொருதும்.

(பொ - ரை.) பொறையாகிய மலைமுகடுகள் கரிய முகில்களோடு நேரே உயர்ந்து மோதும்; ஈவோரின் கைகள் மழை பொழிகின்ற மேகத்தோடு பொரும்; மகளிர் அணிந்த பொன்னணிகலன்கள் பூமாலைகளோடு நேரே பொரும்; அப்பூமாலைகளும் மார்போடு பொரும்; வண்டிகள் நிலத்தோடு நேரே பொரும்; பாக்கள் குளிர்ந்த பாலோடு பொரும்; நாடு செல்வங்களோடு நேரே பொரும்; அச்செல்வங்களும் செழுமையான வீடுபேற்றோடு பொரும் என்பது.

பொறை - (பொற்றை) மலை. சகடு - வண்டி. பா - பாடல். பொழில் - (உலகம்) நாடு. (கூஅ)

காலையோ ளிர்ந்துளி மொட்டிதழ்
விண்ட கடிக்கம லந்தவிசின்
சூலையு ளைந்தோளிர் முத்துசோ
ரிந்தவ ளைக்குல நின்றிரிய
மாலையு றைந்துளி பொற்சிறை
வந்தது தற்கரு வென்றடைகாத்
தாலையு ளைந்திழி யிக்கிடு
மின்பம் அவித்திசை பாடினவே.

(க - ரை.) தாமரை மலரில் சங்கு முத்துக்களை ஈன்று வைத்து விட்டு விலகிப்போக மாலையில் அன்னப் பறவை வந்து பார்த்துத் தன் முட்டையென்று கருதி அடை காத்துக்கொண்டு கரும்பின் சாற்றினிமையை அடங்கச் செய்து இசை பாடின.

(பொ - ரை.) காலையில் கதிரவன் ஒளிர்கின்றபோது அரும்புகளின் இதழ்கள் விரியப்பெற்ற நறுமணமுள்ள தாமரை மலராகிய இருக்கையின்மேல் சூலால் உளைந்து ஒளிர்கின்ற முத்துக்களைச் சொரிந்த சங்கினங்கள் அவற்றில் நின்றும் விலகிப்போக, மாலைப்பொழுது வந்தபோது அழகிய சிறகுகள் உள்ள அன்னப் பறவைகள் வந்து அந்த முத்துக்களைத் தம் கருவாகிய முட்டைகள் என்று நினைத்து அடைகாத்துக்கொண்டு கருப்பாலையுள் அகப்பட்டு நைந்து இறங்குகின்ற கருப்பஞ்சாறு தருகின்ற இன்பத்தைச் சுவையால் வென்றுவிட்டன என்று கருதும்படி இசைபாடின என்பது.

கடி - மணம். பொற்சிறை - அழகிய சிறகுகள் உள்ள அன்னப் பறவைகள். சினையாகுபெயர். வந்து அதி தன் கரு என்று அடைகாத்து ஆலையுளைந்து இழி இக்கு இடும் இன்பம் என்று பிரிக்க.

இக்கு - கரும்பு. (௨௧)

காவிடை மாதவர் கந்தம
லிந்தன கஞ்சமி டைந்தனமே
பூவிடை தேனளி கொம்பும
லிந்து புகன்றம டக்கிளிகள்
நாவிடை பாவினம் நங்கையின்
நன்கையின் நம்புக நம்புளயாழ்
யாவிடை யாயினும் என்றும்
அருந்தயை எந்தையை வாழ்த்தினவே.

(கு - ரை.) சோலையில் முனிவர்; தாமரை மலரில் அன்னம்; மலரில் வண்டுகள்; கிளைகளில் கிளிகள்; நாவில் பாவினம்; மங்கையர் கையில் வீணை; எங்கும் இறைவன் வாழ்த்து.

(பொ - ரை.) மலைக்காட்டில் முனிவர்களும் நறுமணம் நிரம்பின தாமரை மலர்களில் நெருங்கியிருக்கும் அன்னப் பறவைகளும் பூக்களில் தேன் அளி என்ற இருவகை வண்டினங்களும் கிளைகள்தோறும் மிக்கிருக்கின்ற பேசுகின்ற இளங்கிளிகளும் நாவில் பாடல்களும் நங்கையர்களின் நல்ல

கைகளில் விருப்பமான நரம்புள்ள யாழ்களும் எல்லாவிடத்தும் என்றும் அரிய தயவுள்ள ஆண்டவனை வாழ்த்தின.

கா - மலையிலுள்ள சோலை. கந்தம் - மணம். தேன் - வண்டு. அளி - வண்டு. (எ0)

அறத்தில் துறும்புகழ் ஒண்புகழ்
என்றும் அடும்பகைநின்ற னர்கோல்
திறத்தில் துறும்புகழ் வஞ்சனை
என்று(ம்) தெளிந்த மனஞ்சிதைய
மறத்தில் துறும்களி துன்பென
வந்து மயங்கி வழங்குமெலாம்
புறத்தில் துறும்களி போன்றில
வுண்டன பொன்பொழில் பொங்கினவே.

(க - ரை.) அறத்தினால் வருவது நற்புகழ் என்றும் கொன்று பெறுகின்ற புகழ் வஞ்சனை என்றும் உணர்ந்த மனம் மாறுபடும்படியாகப் பாவத்தினால் வரும் இன்பம் துன்பமே என நெறிதவறி வந்து வழங்கும் எல்லாக் குற்றங்களும் புறத்தில் துறுமிப்போக அழியாத இன்பம் நுகர்ந்த அந்தப் பொன்னாடு புகழால் ஓங்கின.

(பொ - ரை.) அறத்தினால் வந்து செறிகின்ற புகழே நற்புகழ் என்றும், கொல்ல வருகின்ற பகை வரையும் கொல்லுகின்ற திறத்தினால் வரும் புகழ் வஞ்சனையே என்றும் தெளிந்த மனமானது மாறுபட, பாவத்தினால் வருகின்ற இன்பம் துன்பமேயாகவும் அவ்வாறு மயங்கி வந்து வழங்கும் எல்லாக் குற்றமும் புறமேபோக அழிதல் இல்லாதன வாகிய இன்பத்தை நுகர்ந்தனவாகிய நாடுகள் புகழால் ஓங்கின என்பது.

பொழில் - நாடு. துறும் - செறியும். (எக)

எல்லை நிகழ்த்திய எல்லென
எல்லையில் எந்தை நிகழ்த்தியநூல்
வில்லை நிகழ்த்திய மெய்மறை
யின்விதி உண்மை நிகழ்த்தியதூய்

ஒல்லே நிகழ்த்திய ஒண்ணறம்
ஒன்றிய உள்ளம் நிகழ்த்தியசீர்
சோல்லே நிகழ்த்திய நண்மை
அறிந்தவர் சொல்லி நிகழ்த்துவரோ.

(க - ரை.) மறை விதித்த அறம் பொருந்திய உள்ளமானது எண்ணிய சிறப்பினைச் சொல்லின் நுட்பம் அறிந்தவர் சொல்லி நடைபெறச் செய்வர்,

(பொ - ரை.) கதிரை உலகில் பரப்பும் சூரியனைப் போல, எல்லையில்லாத பெருமையை உடைய இறைவன் உரைத்த நூலின் பொருளை விளங்கச் செய்த, உண்மை நூலின் முறைமையான உண்மைகளை விளக்கிய, தூய விரைந்து செய்த நல்ல அறங்கள் பொருந்திய உள்ளம் கருதிய சிறப்பினைச் சொற்பொழிவுகள் நிகழ்த்திய நுட்பம் அறிந்தவர் சொல்லி நடைபெறச்செய்வர் என்பது.

அடியவர் சிறப்பினை ஆன்றோர் கூறி நடைமுறைக்குக் கொண்டுவருவர் என்பது. (எஉ)

ஆற்ற வருந்தில நல்லறம்
அல்லதும் அல்லவை இல்லையேனு
மாற்ற அருந்துயர் இல்லதும்
உண்மயல் மல்கலும் இல்லையேனு
ஏற்ற அருந்துதி ஒல்லோலி
அல்லதும் எள்ளதும் இல்லையேனு
சாற்ற வருந்தினும் ஒல்லும்
அருந்தமி ழுஞ்சம மல்லதுவே.

(க - ரை.) அறமல்லது மறமில்லை; அருந்துயர் இல்லை அகத் துன்பமும் இல்லை; துதியொலி அல்லது இகழ்ச்சி ஒலி இல்லை என்று கூற வருந்தினும் அந்நாட்டின் வளம் முழுதும் கூறுவ தற்கு உரிய தகுதிபொருந்திய அரிய தமிழும் கூறுதற்கு ஒத்தது அல்லதுவோ? கூறத்தக்க தகுதி உடையதுவே என்க.

தமிழாலும் சொல்ல முடியாததுவோ என்பது குறிப்பு.

(பொ - ரை.) செய்வதற்கு வருத்தம் இல்லாதன வாகிய நல்ல அறம் மட்டுமேயன்றித் தீவினைகள் இல்லை என்றும், நீக்குதற்கு அரிய துன்பம் இல்லாததாகிய அந் நாட்டில் உள்ளத்தில் மயக்கம் பெருகுதலும் இல்லை என்றும், போற்றுதற்கு அரிய, துதியொலியல்லது எள்ளுவதாகிய இகழ்ச்சியும் இல்லை என்றும், சொல்ல வருந்தினும் அந்நாட்டின் வளம் முழுதும் கூறுதற்கு உரிய தகுதி பொருந்திய அரிய தமிழும் கூறுதற்கு ஒத்தது அல்லதுவோ? கூறத்தக்கதே என்பது.

ஏகாரம் வினா. (எக)

பூம லிந்த பொருத்தரும் பொற்பெலாம்
பூம லிந்துபொ ருத்திய பொற்பினால்
நாம லிந்தந சைக்குயர் நாடினும்
நாம லிந்தஇ சைக்குயர் நாடதே

(க - ரை.) உலக வளமெல்லாம் பூவொடு பொருந்திய அழகினால் நம் உயர் விருப்பிற்கும் நாவின் உயர் புகழுக்கும் மேலான நாடு.

(பொ - ரை.) பூவுலகில் நிறைந்த சேர்த்தற்கு அரிய அழகு எல்லாம் பூவழகொடு நிறையச் சேர்த்து வைத்திருக்கின்ற அழகினால், நாம் விரும்பிய மிகுந்த ஆசைக்கு ஏற்ப உயர்வாக உள்ள நாடாக வேண்டுமென்று ஆராய்ந்தாலும், நாவில் மிக்குத் தோன்றுகின்ற புகழ்ச் சொல்லிற்கும் மேம்பட்ட நாடு அதுவேயாகும்.

நாம் + மலிந்த. நா + மலிந்த என்று பிரிக்க. (எச)

வண்டு ரைத்து மலர்ந்தலர்ப் புண்ணலால்
வண்டு ரைத்து மலர்ந்தகப் புண்ணிலால்
வண்டு ரைத்து மயக்குஇல நாடுஅலே
வண்டு ரைத்து மயக்குறும் நாடதே.

(க - ரை.) மலரில் வண்டு குடைந்த புண்ணன்றி வண்டாகிய அம்பு தைத்த புண்ணில்லை; வண்டாகிய சங்கின் ஒலி மயக்கம் அன்றி வண்டாகிய குற்றம் சாற்றப்பட்டு மயங்கும் மயக்கமில்லாத நாடு அந்நாடு.

(பொ - ரை.) வண்டுகள் குடைந்து மலர்த்துகின்ற மலரிலுள்ள புண்களன்றி அம்புகள் குடைந்து மலர்த்து கின்ற அகப்புண் இல்லை; குற்றம் சாற்றி மயங்கச் செய்தல் இலவாகிய விரும்புகின்ற அலைகடலிலுள்ள வண்டாகிய சங்கு ஒலித்து, ஒலிமயக்குதலைச் செய்கின்ற நாடு அதுவே.

வண்டு - தேனுண்ணும் வண்டு. வண்டு - அம்பு. வண்டு - குற்றம். வண்டு - சங்கு. மலர்த்தலர், மலர்த்தகம் என்பன மெலிந்து மலர்ந்தவர், மலர்ந்தகம் என நின்றன. (எ0)

மாலை மாறி வயங்கிய மாமதி
மாலை மாறி வயங்கிய மாதர்கள்
மாலை மாறிய கற்புடை மார்புறை
மாலை மாறிய கற்புடை மாண்பரோ.

(க - ரை.) முழுமதியை வென்ற முகமுள்ள மயக்கம் நீங்கிய கற்புள்ள மாதர்கள் தம் மார்பில் அணிந்துள்ள முல்லைப் பூமாலையின், மாண்பு போன்ற மாண்பினையுடையவராயினர்.

(இ - ள்.) மாலை மாறி - மாலைப் பொழுதிலுள்ள இருளை நீங்கச் செய்து, வயங்கிய - விளங்கிய, மாமதி-முழு மதியின், மாலை-இயல்பினை, மாறி - மாறச்செய்து வென்று, மாலை மாறிய - மயக்கம் நீங்கிய, வயங்கிய கற்புடை மாதர்கள் - விளங்கிய கற்புள்ள பெண்கள், மார்பு உறை - தம் மார்பில் தங்கியுள்ள, மாலை மாறிய - மலர் நிலையிலிருந்து மாலையாகக் கட்டப்பட்டு மாறிய (முல்லை மாலையின்) கற்புடை மாண்பர் - அழகுள்ள மாண்பினராயினர்.

மாலை - இயல்பு. 'மாலை இயல்பே' என்பது தொல்காப்பிய உரியியல் நூற்பா. அரோ : அசை. (எக)

மாசி கற்கு வழங்கிய வம்பிலார்
மாசி கற்கு வழங்கிய வன்பிஞர்
தேசி கத்திணை சீர்வரைத் தோளிஞர்
தேசி கத்திணை சீர்வரைத் தோதுமார்?

(க.-ரை.) குற்றமுள்ள பகைமேற் செலுத்தும் படை வழங்கும் வாய்ப்பு இன்மையால் கொடை வழங்கும் அன்பராகத் திகழும் வீரர்தம் புகழ் கூறுவதற்கு அரிது.

(பொ - ரை.) குற்றம் பொருந்திய பகைவர்மீது செலுத்துவதற்கு அம்பு முதலாகிய படைக்கருவிகள் இல்லாதவராகிய வீரர் மேகத்துடன் மாறுபட்டு அதனை மிஞ்சும் அளவிற்கு அன்புடன் பிறர்க்குக் கொடை கொடுத்தார்; பொன்னை ஒத்து விளங்கும் சிறப்புடைய மலைபோன்ற தோளையுடையவர்கள் ஆகிய வீரர்களது புகழுக்கு ஈடாகிய சிறப்பை எழுதி எடுத்துச் சொல்லக் கூடியவர் யார்? ஒருவரும் இல்லை என்றபடி.

மாசிகற்கு - மாசு இகற்கு. அம்பிலார் - அம்புஇலார். வரைத்து ஓதம் ஆர்? வரைத்து - வரைந்து என்பதன் வலித்தல் விகாரம். ஓதுமவர் ஆர் என்பது ஓதுமார் என மருவிற்று. (எஎ)

அல்ல தில்லை யருந்தவ மாய்த்திரு
வல்ல தில்லை யருந்த வளித்தலாற்
புல்ல தில்லை புனைந்தற மாட்சியாற்
புல்ல தில்லை புனைந்தன வாழ்க்கையால்.

(க - ரை.) அருந்தவம் பொருந்துதலால் இருளும் இல்லை; யாவரும் அருந்தும் வண்ணம் கொடுத்தலால் வறுமையும் இல்லை; அறநெறியை மேற்கொண்ட மேன்மையால் சிறுமையும் இல்லை; செல்வம் நிறைந்த வாழ்க்கையால் குறைவும் இல்லை.

(பொ - ரை.) செய்வதற்கு அரிய தவம் பெருகுவதனால் இருளானதும் இல்லை; யாவரும் துய்க்கும்படி கொடுக்கின்ற காரணத்தால் செல்வம் இல்லாதவரும் இல்லை; அறநெறி பூண்டு ஒழுகும் மேம்பாட்டினால் சிறுமையும் இல்லை; யாவும் நிறைந்ததாகிய வாழ்க்கையால் குறைவும் இல்லை.

அல்லது - அல்லாகிய அது. அல் - இருட்டு. திருவல்லது - வறுமை. (எஅ)

இருள கன்றவி ரேல்வினை போலலா
விருள கன்றவி ரில்வினை யோரேலா
மருள கன்றகைப் பாருமி லாமையா
லருள கன்றகைப் பாரல தில்லையே.

(க - ரை.) இருள் நீக்கி விளங்கும் கதிரவனது செயலைப் போல் மனமயக்கம் நீங்கி வாழும் இல்லறத்தோருள் அருள் நீங்கிய நெஞ்சக் கசப்புடையோர் யாரும் இல்லாதபடியால் அருளோடு கொடுத்தல் நிறைந்த பெருமையோரை அன்றி யாரும் இல்லை.

(பொ - ரை.) இருளைப் போக்கி விளங்கும் ஞாயிற்றினது தொழிலைப்போல் மனமயக்கம் எல்லாம் ஒழிந்து விளங்கும் இல்லறத்தாருள் யாரும் இரக்கம் அற்று வெறுப்பவர் இல்லாதபடியால் கொடைமிகுந்து மேம்படுவாரன்றிப் பிறர் இல்லையாம்.

இருளகன்றவிர் - இருள் அகன்று அவிர்.

அருளகன்ற கைப்பார் - அருள் அகன்று அகைப்பார். அகன்று மூன்றும் அடியில் நீங்குதல் என்னும் பொருளிலும் நான்காம் அடியில் விரிதல் என்னும் பொருளிலும் வந்துள்ளது.

(எக)

வேயு முத்த மிடைந்தன, வேலிவாய்;
வேயு முத்த மிடைந்தன, வேலைவாய்;
வாயு முத்த மலிந்தன தீங்கழை
வாயு முத்த மலிந்தன வாயெலாம்.

(க - ரை.) மூங்கிலினிடத்து முத்துக்கள் நிறைந்தன; வயலினிடத்துச் செந்நெல் முத்துக்கள் நிறைந்தன; கடலிடத்துள்ள பெரும் முத்துக்கள் அங்கே நிறைந்தன; கரும்பினிடத்துள்ள முத்துக்கள் நிறைந்தன. இவ்வாறாக, எல்லா இடங்களிலும் முத்துக்கள் நிரம்பி இருந்தன.

(பொ - ரை.) மூங்கிலினிடத்து முத்துக்கள் நிறைந்தனவும் வயலினிடத்து உண்டாகும் செந்நெல் முத்துக்கள் நிறைந்தனவும் கடலினிடத்து உள்ள பெருமுத்துக்கள் அங்கே நிறைந்தனவும், இனிய கரும்பினிடத்து உள்ள முத்துக்கள் நிறைந்தனவும் ஆக எல்லாவிடத்தும் முத்துக்கள் நிறைந்தன.

வேயுமுத்தம் மிடைந்தன என்பதை வேய்முத்தம் மிடைந்தனவும் எனவும், வாயுமுத்த மலிந்தன வாயெலாம் என்பதை வாயும், முத்தம் வாயெலாம் மலிந்தன எனவும் கூட்டுக. (அ0)

செல்லின் மாரி திளைத்தென வள்ளியோர்
செல்லின், மாரி திளைத்தன வண்மையே;
சொல்லின் மாரி சொரிந்தென, ஏதிலாச்
சொல்லின் மாரி சொரிந்தனர் வேதியார்.

(க - ரை.) வள்ளல்களிடம் சென்றால் மேகங்கள் பொழிந்த மழையைப்போல் நிறையக் கொடை கொடுப்பர். குருமார்கள் தேன் மழை பொழிந்தது போலக் குற்றமற்ற சொல் மழை பொழிவார்கள்.

(பொ - ரை.) மேகங்களிடமிருந்து மழை சொரிவது போல் வள்ளல்களிடம் சென்றால் கொடையை மழையாகப் பொழிவார்கள். தேன் மழை பொழிவதுபோலக் குற்ற மற்ற சொல்மழையைக் குருமார்கள் பொழிவார்கள்.

செல் - மேகம். திளைத்தென - திளைத்தது என என்பதன் விகாரம். சொல் - தேன். (அக)

வாவி பங்கய மல்கிய நாண்மலர்
வாவி பங்கய மல்கிய மாண்பெனப்
பாவி யங்கிய லாப்பய ஞகையாற்
பாவி யங்கிய யாப்பயன் சால்பரோ ?

(க - ரை.) பாவிகள் அந் நாட்டில் இல்லாமையால் வானில் உயரும் மரக்கிளைகளில் நிறைந்த மென்மையான புதுமலர்கள் குளத்தில் விளங்கும் தாமரை மலர்கள்போல் குளிர்ச்சியுடன் சிறப்புற்றுத் திகழும். அந் நாட்டின் சிறப்பைக் கூறப் பாடல் களில் பொருந்திய எப்பொருள் தகுதியுடையது?

(பொ - ரை.) (வானம்) தாவும் மரக்கிளைகளில் நிறைந்த மென்மையான புதுமலர்கள் தாமும் (வெயிலால் வாடும் தன்மையின்றி) குளத்திலுள்ள தாமரை மலர்போல் குளிர்ந்திருக்கும் அளவுக்கு நன்மை பெருகித் தோன்ற, பாவிகள் அந்நாட்டில் இல்லாத தன்மையுடையது ஆகையால், அதன் சிறப்பைக் கூறப் பாக்களில் பொருந்தக் கூடிய எப்பொருள் தகுதி உடையதாகும்?

வாவி பங்கயம் - வாவு இபம்கயம். அரோ : அசைச்சொல். (அஉ)

பார ணிந்த வணிக்கலப் பான்மைபோல்
சீர ணிந்த செழுந்தட நாட்டிடை
மார ணிந்தணி மாமணி மானிய
வேர ணிந்த நகர்க்கிய லேற்றுவாம்.

(க - ரை.) பூவுலகத்திற்கு ஓர் அணிகலம்போல் செல்வம் பூண்டு விளங்கும் செழிப்புமிக்க அந்தப் பெரிய நாட்டில் மார்பிலே பூண்ட ஓர் அழகிய பெரிய மணியைப்போல அழகு பொருந்திய நகரத்தின் சிறப்பு இயல்பினைப் புகழ்ந்து சொல்வோம்.

(பொ - ரை.) இந்த நிலவுலகத்தால் பூணப்பெற்ற ஓர் அணிகலத்தின் தன்மைபோலச் செல்வங்களைக்கொண்டு வாழும் செழிப்பும் பரப்பும் மிகுந்த அந்த நாட்டில், பூமி தன் மார்பில் அணிந்த ஓர் அழகுள்ள பெரிய மணியை ஒத்த அழகு பொருந்திய நகரத்தின் தன்மையைப் புகழ்ந்து சொல்வோம்.

மார் - மார்பு. அணிகலம் எனற்பாலது அணிக்கலம் என விரித்தல் விகாரமாயிற்று. மானிய - ஒத்த. (அ௩)

---

## உ. நகரப் படலம்

மெய்வழி மறைநூல் நீங்கி
　　வியனுல கினிதேன் றின்ன
வவ்வழி வுற்ற தென்ன
　　வதிங்தேமை யளித்துக் காக்கச்
செவ்வழி யுளத்த தூயோன்
　　தெரிந்தமா நகரி தென்றல்
இவ்வழி பின்ன ருண்டோ
　　எருசலேம் நகரை வாழ்த்த.

(க - ரை.) வேதநெறி நீங்கி உலகம் பாவம் செய்து அழிந்தது என்று கருதி உயிர்களைத் தெருட்டிக் காக்கத் தூயோனாகிய கிறித்துநாதர் தாம் தோன்றுதற்குத் தெரிந்தெடுத்த நகரம் இதுவென்றால் எருசலேம் நகரை வாழ்த்த இதுவன்றி வேறு வழி உண்டோ?

(பொ - ரை.) மெய்யான வேதநூலின் நெறியைவிட்டு அகன்ற உலகமானது, இன்பமென்று கருதி இன்னாத பாவத்தை வவ்வி யொழுகும் காரணத்தால் அழிவுற்றது என்றமையால், வந்து தங்கி எம்மைக் காத்து இரட்சிக்கச் செவ்வையாகிய முறைமையின் உணர்வுள்ள தூயோனாகிய கிறித்து தாம் தோன்றுதற்குத் தேர்ந்தெடுத்த பெரிய நகரமே இந்தச் செருசலேம் என்றால் அந்நகரை வாழ்த்த இந்நெறியன்றி வேறு ஒரு நெறியுண்டோ என்பது. (க)

ஆளேனை யுடைய நாதன்
　　அவனியுள் மனுவாய்த் தூய்தன்
தாளிணை தாங்கிற் றேன்னத்
　　தாழவா னவரு மாக்கள்

கோளினை யுடைவான் வீட்டைக்
குறுகவும் வழியீ தென்றால்
மீளினை வருந்தி நாடி
வியனகர் புகழ்வ ராரோ.

(க - ரை.) நாதன் தாளைத் தாங்கிய நகரமென்று வானோர் வந்து இறங்கவும் மக்கள் வானுலகம் ஏறவும் வழி இது என்றால் மேலும் உவமை தேடிப் புகழவல்லார் எவர்?

(பொ - ரை.) அடிமையாக என்னையுடைய நாதன் இவ்வுலகினுள் தானும் ஒரு மனிதனாகி வர அவனுடைய தூய தாள்களை இந்நகர் தாங்கிற்று என்று வானவரும் வந்திறங்கிப் போற்றவும் மக்களும் கோள்மீனின் ஒளிசூழ்ந்த வான்வீட்டில் சென்று சேரவும் இந்நகரமே வழி என்றால், மேலும் இதற்கு உவமைகளை வருந்தித் தேடிப் புகழ வல்லார் யாவரேயோ? (௨)

விட்புல னகன்று வாய்த்த வீட்டிடை வழங்கு மாட்சி
கட்புல னகன்ற தென்னக் கருதியோ ருவமை காட்ட
மட்புல னிணங்கு மின்ன மாநக ரிணையென் றேதி
யுட்புலன் கடந்த நாத னுயர்நகர் புகழு மாறே.

(க - ரை.) வானுலகத்திற்கு அப்பால் உள்ள வீட்டுலகத்தில் வழங்கும் மாண்புகள் எல்லாம் கண்ணுக்கு எட்டாதவை என்றெண்ணி அதற்கு ஓர் உவமை காட்ட வேண்டுமென்று பூவுலகில் இருக்கும் இம்மாநகரை அவ்வீட்டிற்கு ஒப்பானது என்று மன நினைவுக்கும் எட்டாத நாதனுடைய எருசலேம் நகரைப் புகழ்ந்தான்.

(பொ - ரை.) வானம் என்னும் இடத்தைக் கடந்து இருக்கும் மோக்கம் என்னும் வீட்டின் இடத்து வழங்கும் மாட்சிமை கண் என்னும் புலனைக் கடந்தது என்று நினைத்து (அதற்கு) ஓர் உவமை காட்டவேண்டுமென்று பூவுலகமாகிய இவ்விடத்தில் இருக்கும் இந்தப் பெரிய நகரை ஒத்தது என்று கூறி உள்ளறிவையும் கடந்த நாதனது உயர்ந்த எருசலேம் நகரைப் புகழும் தன்மையாம்.

விட்புலன் - விண்ணாகிய புலன். (௩)

நவ்வியங் கதிர்கோள் சூட்சி
நாயகன் முதல்வா னேருஞ்
செவ்விய மதுரச் சொல்லாற்
சீரிய காட்சி யோரு
மவ்விய மகன்று தேறு
மருந்தவத் தோருஞ் செய்த
கவ்விய புகழ்பின் னுண்டோ
கூறவு மூகை யானே.

(க - ரை.) தெளிந்த ஒளிதிகழும் உணர்வுகொண்ட நாயகன் முதலாகவுள்ள தேவர்களும் நல்ல இன்சொல்லுடன் சிறந்த காட்சியும் உடையோரும் அழுக்காறு நீங்கித் தெளிந்த அருந்தவமுடையோரும் ஆகிய யாவரும் கூறிய நிறை புகழுக்கு மேலாக ஊமையாகிய நான் சொல்வதற்கு வேறு எதுவும் உளதோ?

(பொ - ரை.) தெளிந்த கதிர்களோடுகூடிய உணர்வைக்கொண்ட நாயகன் முதலாக உள்ள தேவர்களும் நல்ல இனிமையுள்ள சொற்றொடர்களுடன் சிறந்த காட்சியுடையோரும் அழுக்காறு நீங்கித் தெளிந்த அரிய தவத்தையுடையவரும் சொன்ன நிறைந்த புகழ்களின் பின்னர் ஊமையாகிய நான் சொல்லவும் வேறு எதுவும் உண்டோ?

மதுரச் சொல்லால் - மதுரச் சொல்லோடு. (௪)

தேனக வினிய வன்பார் திருவினே னருளிற் சிந்தும்
மீனக விருளைச் சீக்கும் வெயிற்குழா முயிர்த்த செந்நீர்
தானக முடியாய்ச் சூடித் தமனிய நகரம் பூண்ட
வானக நகவோண் மாட்சி வகுத்துரைப் பரிய வாறே.

(க - ரை.) திருவுள்ளத்தில் தேனினும் தித்திக்கும் அன்புடைய செல்வனாகிய கடவுளே அருள்கூர்ந்து சிந்திய மீனினும் விளங்கி இருள்போக்கும் செங்கதிரோன் ஒளி வெளிப்பட்டது போன்ற தனது திவ்விய இரத்தத்தைத் தான் இன்பமாய் முடியாகச் சூடிய அதனால் அப்பொன்னகரே சூழ்ந்த வானத்திலும் சிறந்து விளங்கும் உயர்ந்த மாட்சிமையை வகைப்படுத்திக் கூறுவது அரிது.

(பொ - ரை.) திருவுள்ளத்தில் தேனினும் இனிமை பொருந்திய அன்பு நிறைந்த செல்வனாகிய கடவுளே அருளினால் சிந்திய மீனைக்காட்டிலும் விளங்கி இருளை ஒழிக்கும் சூரியனுடைய சிவந்த ஒளித்திரள் வெளிப்பட்டதுபோன்று திவ்விய இரத்தத்தைத் தான் இன்பமாய் முடியாகச் சூடிய அதனால் அப் பொன்னகரோ சூழ்ந்த வானத்தினும் ஒளி பொருந்தி விளங்கும் மாட்சிமையை வகைப்படுத்திக் கூறுவது அரிது.

தேனக விளிய வன்பார் - அக தேன் இனிய அன்புஆர். தானக - தான் நக. வானக நக வொண்மாட்சி - வானகம் நக ஒண் மாட்சி. (௯)

பயனினான் மறைநூ லோக்கும்;
பகலினை மணியா லோக்கும்;
வியனினா லுலக மோக்கும்;
வேலியாற் கன்னி யோக்கும்;
முயலினா லலையை யோக்கும்;
முனிமுனி வொன்னார்க் கோக்கும்;
நயனினா லுயர்வீ டோக்கும்;
நகரினை யோக்கும் வீடே.

(க - ரை.) எருசலேம் நகரம் எல்லோர்க்கும் வழங்கும் பயனால் வேதநூலை ஒக்கும். இரத்தினங்களின் ஒளியால் செங்கதிரோனையும் பரப்பினால் உலகத்தையும் காவல் மதிலால் அழியாத கன்னியையும் இடைவிடாத முயற்சியால் கடலையும் ஒக்கும். தன் பகைவர்க்கு முனிவர் சினத்தையும் நன்மைகளினால் உயர்ந்த மோட்சத்தையும் ஒக்கும். மோட்சம் ஒன்றுதான் எல்லா வகையிலும் இந் நகரத்திற்கு நிகராகும்.

(பொ - ரை.) எருசலேம் நகரம் யாவர்க்கும் பயன் படும் வகையில் வேதநூலை ஒக்கும்; அங்குள்ள இரத்தினங்களின் ஒளியால் கதிரவனை ஒக்கும்; விரிவினால் உலகத்தை ஒக்கும்; அழியாத காவலுடைய மதிலினால் அழியாத கன்னிப் பெண்ணை ஒக்கும்; வருவார் போவாரின் இடைவிடாத முயற்சியாலும் அதனால் எழும் ஓசையாலும் கடலை

ஒக்கும். பகைவருக்கு (அழிவுதரும் தன்மையால்) முனிவரின் சினத்திற்கு ஒப்பாகும். அங்கு வாழ்பவருக்குத் தரும் நன்மைகளால் உயர்ந்த மோட்சத்தை ஒத்து விளங்கும். நகரம் முழுவதற்கும் நிகராகச் சொல்லத்தக்கது மோட்சம் ஒன்றே.

பகல் - கதிரவன். வியன் - விரிவு; பரப்பு. வேலி - மதில். முயல் - முயற்சி. அலை - அலையை உடைய கடல்; சினையாகு பெயர். முனிமுனி வொன்னார்க் கொக்கும் - முனிமுனிவு ஒன்னார்க்கு ஒக்கும். (சு)

மதிலும் அகழியும்

பொற்றங்கு முலகந் தன்னை
போங்கிருங் கடல்சூழ்ந் தென்ன
விற்றங்கு மிரவி காலும்
வெயிற்பிழம் பனைய நாறிச்
செற்றங்கு மலையி னோங்கிச்
சேணுறு மதிலைச் சூழ்ந்த
வெற்றங்கு மலையை மாறி
யிகன்றக லகழித் தோற்றம்.

(க - ரை.) பொன்னுலகத்தைப் பெருங்கடல் சூழ்ந்தது போலச் சூழ்ந்து வானவில்லோடு கூடிய சூரியனின் ஒளித்திரளை ஒத்து ஒளிர்ந்து, மேகங்களைச் சூடும் மலைபோல் வானில் உயர்ந்து புகுந்த மதிலைச் சுற்றியுள்ள அகன்ற அகழியானது சூரியன் தங்கும் உதய கிரியோடு மாறுபட்டு அதனை எதிர்த்து நிற்பது போன்று காட்சியளித்தது.

(பொ - ரை.) பொன் இருக்கும் உலகத்தைப் பொங்குகின்ற பெரிய கடல் சூழ்ந்ததுபோலவும் வானவில் பொருந்திய சூரியன் வெளிப்படுத்திய ஒளித்திரளைப்போலவும் தோற்றமளித்து மேகங்கள் நிலைபெற்றிருக்கும் மலையைவிட உயர்ந்து வானத்தில் புகுந்த மதிலைச்சுற்றிய அகன்ற அகழி கதிரவன் தங்கிய உதயகிரியை மாறுபட்டு எதிர்ப்பது போன்று காட்சியளித்தது. (எ)

பூவுல கியல்பன்று அம்போன்
போலிமணி நகரம் போன்ஞர்
தேவுல குரித்தேன் றங்கட்
டேளிந்துபுக் கிடுமேன் ருழீ
தாவுல கிருத்த வேள்ளித்
தாடளை யிட்ட தேபோல்
கோவுலகு இஞ்சி சூழ்ந்த
குவளைநீள் அகழித் தோற்றம்.

(க - ரை.) மண்ணுலகம் தான் இருப்பதற்குத் தக்கதன்று, விண்ணுலகமே தக்கது என்று கருதித் தெளிந்து(மதில்) அங்கே போய்விடுமென்று அஞ்சி உலகம் வெள்ளி விலங்கிட்டு நிறுத்தியதுபோல் விளங்கிற்று வானுயர் மதிலின்கீழ் அடியில் உள்ள குவளைபூத்த அகழியின் தோற்றம்.

(பொ - ரை.) பூவுலகம் தான் இருப்பதற்குத் தகுதியுடையதன்று, அழகிய பொன்னற் பொலிவுபெற்ற மணி நகராகிய செல்வம்மிக்க தேவருலகமே உரியது என்று கருதித் தெளிந்து அங்கே சென்று புகுந்திடுமென்றும் கடல் சூழ்ந்த இவ்வுலகிலேயே இருத்தவேண்டுமென்றும் கருதி வெள்ளி விலங்கினைக் காலைச் சுற்றி இட்டதுபோன்று (தோன்றிற்று) வானுலகளாவிய மதிலைச் சூழ்ந்த குவளைப் பூக்கள் மிக்க அகழியின் தோற்றம்.

இஞ்சி - மதிள். (அ)

சீரியார் நட்பு வேர்கோள் சீரேன நிலத்திற் ருழ்ந்து
பூரியார் நட்பு போலப் புணர்ந்தசை வலமே லாடி
நாரியார் அழகு காண நாணிய கமலம் இங்கண்
வேரியார் இதழைப் பூத்து வெறியேறி அகழித் தோற்றம்.

(க - ரை.) பெரியோர் நட்பு வேர்கொள்ளுவதுபோல், நிலத்தில் தாழ்ந்தும் கீழ்மக்கள் நட்பு மேலாடுவதுபோல் பாசி மேலாக அடைந்தும் மகளிர் முகங்கண்டு நாணிய கமலம் இங்கே வந்து தேன் தங்கிய இதழ்களை மலர்ந்து மணம் வீசும் இது அகழியின் தோற்றம்.

(பொ - ரை.) சீரியருடைய நட்புத் தாழ்ந்து வேர் கொள்வதுபோல் அகழியும் நிலத்தில் ஆழமாகத் தாழ்ந்துளது. தாழ்ந்தோர் நட்புப்போல அகழிநீரிற் பொருந்திய பாசி மேலாக ஆடியது. மகளிர் அழகு கண்டு நாணிய தாமரை மலர் அங்கே இராமல் இங்கே வந்து நறுமணமுள்ள இதழ்களை விரித்து வாசனை பரப்பும். இத்தன்மையுடையது அகழியின் தோற்றம்.

சீரியார் - பெரியோர். பூரியார் - சிறியோர். காரியார் - மகளிர். வேரி - தேன். (௯)

ஈரும்வாள் எயிற்றின் கூன்வெண்
இளம்பிறை தோன்ற ஊனைச்
சோரும்வாய் விரித்துக் கண்தீச்
சொரிதர அகழி தாழ்ந்து
பேரும்வாய் உருக்கோண் டன்று
பேய்க்குலம் வெருவுய்த் தெய்தி
ஊரும்வாய் என்ன அங்கண்
உழக்கிய இடங்கர் ஈட்டம்.

(க - ரை.) அகழியில் முதலைக் கூட்டங்கள் உள்ளன; அவை அந்த அகழியினை ஆழமாக வெட்டும்போது நரகத்தளவுஞ் சென்று பேய்களுடன் கூடி அச்சந்தோன்றத் திரிவனபோலக் காணப்படும்.

இடங்கர் - முதலை,

(பொ - ரை.) அறுக்கும் வாள்போன்றும் வளைந்த வெண்மையான இளம்பிறை போன்றும் பற்கள் தோன்றவும், ஊனைச் சொரிகிற வாயை விரித்துக் கண்கள் வழியாக நெருப்புச் சொரியவும், அகழியானது வெட்டப்பட்டுத் தாழ்ந்து பெயரும்போது நரகத்தினளவுஞ் சென்று அங்கே கிடக்கும் பேய்களின் உருவங்கொண்டு அப்பொழுது அச்சம் உண்டாக்கி வந்து முதலைக் கூட்டங்கள் திரியும் இடங்கள்போல் அவ்விடத்தில் சுழன்று திரிந்தன. (௧௦)

ஓவலிற் றெழிற்பூ மாதே
உவந்தநாள் செறிந்த கற்றை
தூவலின் பகல்செய் பைம்பொன்
சுடர்முடி சூழ்ந்த தென்ன
ஆவலின் கிளர்நன் றுட்கொண்டு
அடிகள்தம் மனத்தைக் காக்கும்
காவலின் கதுவி டாத
கனகமா மதிலின் தோற்றம்.

(க - ரை.) பொன்மதிலின் தோற்றம் நிலமடந்தை களி கூர்ந்த நாளில் வீசிய கதிரொளி பொன்முடியாய்ச் சூழ்ந்தது போலும்.

(பொ - ரை.) நீங்குதல் இல்லா அழகு உள்ள நில மடந்தை களிகூர்ந்த நாள் செறிந்த கதிர்த்தொகுதியைப் பொழிந்தாள்; அக்கதிர் ஒளிசெய்கின்ற பைம்பொற் சுடர் முடி சூழ்ந்ததுபோல விளங்கிற்று. கனகமா மதிலின் தோற்றமும் அச்சுடர்முடி போலவும் உணர்வுக்கு மேலான நன்மையை உட்கொண்டு துறவிகள் தம் மனத்தைக் காக்கின்ற காவலைப்போல மனம் சென்று பற்றாத தோற்றம் உடையது. (கக)

காரணி பசும்பொற் குன்றின்
காட்சிபோல் மதிலைச் சூழ்ந்து
சீரணி யனைத்துஞ் சேர்த்த
செழுநகர் திறந்த வாயில்
பேரணி எவையும் ஈட்டிப்
பின்னவை யுவப்பிற் காட்டப்
பாரணிப் பேழை யாரும்
பயன்படத் திறந்த போன்றே.

(க - ரை.) மேகம் தவழும் பொன்மலைபோல் மதில்; எல் லாப் பொருள்களையும் தொகுத்து வைத்துப் பூமி மகிழ்வொடு பிறருக்குக் காட்டத் திறந்து வைத்தது போன்றது மதில் வாசல்.

(பொ - ரை.) கார்மேகத்தை அணிந்துகொண்ட பசுமையான பொன்மலையின் காட்சிபோல் விளங்கும் மதிலைச் சுற்றியுள்ள சிறந்த அழகு நலன் எல்லாவற்றையும் சேர்த்துக்கொண்ட செழுமையான நகர் திறந்துவைத்த வாயில் பூமியானது பெருமையான அணிகலன்கள் எல்லாவற்றையும் தொகுத்துப் பின்பு அவற்றைக் களிப்பொடு யாவர்க்கும் காட்டத் தன் அழகிய பேழையைப் பயன்படத் திறந்து வைத்தது போன்றது. (௧௨)

நீதிநன் முறைகள் ஓதி நீண்டுவீ டேய்தி வாழ
வீதியீ தென்னக் காட்டி விரித்தநுண் ணருநூல் வேதம்
ஆதிவந் துரைப்ப வாய்ந்த அருத்தியோ டலர்ந்த வாயே
சோதிபெய் யறத்தின் பண்பால் சுடர்நகர் திறந்த வாயில்.

(ந - ரை.) வீட்டிற்குரிய நூலை இறைவன் வந்துரைப்ப மலர்ந்த அவன் திருவாய் போன்றது அறத்தின் பண்பொடு விளங்கும் நகரத்தின் திறந்த வாயில்.

(பொ - ரை.) அறநெறியின் நன்முறைகளை ஓதி வீடு பேறெய்தி நெடிது வாழ்வதற்கு இதுவே வழி என்று காட்டி விரிவாகச் செய்த நுண்ணிய அரிய வேதநூலை ஆதியாகிய இறைவனே வந்து சொல்ல முறையான ஆசையோடு மலர்ந்த திருவாயே போன்றது கதிர்விடும் நல்லறத்தின் பண்பினால் விளங்குகின்ற நகரத்தின் திறந்த வாயில் என்க. (௧௩)

மீனிகர் வயிரத் தூண்கள்
விண்புக நிரைத்து வாய்ந்த
யாநிகர் அனைத்தும் நீக்கும்
எரிமணிக் கோபு ரத்தின்
வானிகர் நிறுவுஞ் சென்னி
வைத்தபொன் தசும்பின் தோற்றம்
கோனிகர் நகரம் சூடும்
குளுஞ்சுடர் மகுடம் போன்றே.

(க - ரை.) மணிக்கோபுரத்தின் உச்சியில் வைத்த பொற் குடத்தின் தோற்றம் மற்ற நகர்க்குள்ளே இது இராசமா நகரம் என்று சூடின கதிர்முடி போன்றது.

(பொ - ரை.) விண்மீன்கள்போல் விளங்கும் வயிரத் தூண்களை வானளாவ நிரல்பட நாட்டி, நிகராக வாய்ந்த உவமைகள் யாவை அவை அனைத்தையும் கடந்து நிற்கின்ற ஒளிர்கின்ற மணிக்கோபுரத்தின் வானம் நிகராக நிறுவப் பட்ட உச்சியின்மேல் வைத்த பொற்குடத்தின் தோற்றம் நகரின் அரசத்தன்மைக்கேற்பச் சூடிய குளிர்ந்த சுடர்முடி போன்று விளங்கிற்று. (௧௪)

இட்டநூல் வழாமை யோடி எல்லையி லோடும் வீதி
சுட்டநூல் அறிஞர் கல்வித் துணிவோடு வளர்ந்த மாடம்
சட்டநூல் வீரர் கற்பின் தகைநலார் முறையும் மற்ற
வட்டநூல் வழாமை யோடு மலிநலம் கிளக்க லுற்றேன்.

(க - ரை.) வீதி, மாடம், வீரர், கற்புடை மங்கையர், மற்ற நலம் ஆகியவற்றைச் சொல்லத் தொடங்குகின்றேன்.

(பொ - ரை.) போட்ட நூல் சாயாமல் இணைந்து அள வின்றி நீண்ட வீதிகளைப்பற்றியும், சுட்டிக் காட்டத்தக்க சிற்பநூல் அறிஞரின் கல்வித் துணிவோடுகூடி உயர்ந்த மாடங்களைப்பற்றியும், போரின் விதியாகிய சட்டநூல் உணர்ந்த வீரர்களைப்பற்றியும், கற்பின் தகுதியையுடைய மங்கையரின் ஒழுக்க முறையைப்பற்றியும் மற்றும் சக்கர நெறியாகிய அரசியல்நெறி வழுவாமையோடு மிகுந்த நலங்களைப்பற்றியும் சொல்லத் தொடங்குகின்றேன். (௧௫)

மழைத்தலை விலகுப வளர்ந்த மாடங்கள்
இழைத்தலை யரிதினில் இழைத்த வெண்சுதை
பிழைத்தலை அறத்தொளி பிளிர வெள்ளியம்
தழைத்தலை மலைக்குழாம் தயங்கும் தன்மையே.

(க - ரை.) முகில்விலக வளர்ந்த மாடங்கள் வெண்சுதை தீற்றப்பட்டு ஒளி பரப்பி வெள்ளி மலைக்குழாம் போன்றன.

(பொ - ரை.) மேகங்கள் விலகிச் செல்லுவனவாக உயர்ந்த மாடங்களின் அழகிய உச்சியில் அரிதாகப் பூசப்பட்ட வெண்சுதையின் வெள்ளைநிறம் குறைவின்றி ஒளிவீச, அம் மாடங்கள் வெள்ளியின் அழகிய ஒளி தழைத்த உச்சியையுடைய வெள்ளிமலைக் கூட்டங்கள் விளங்கும் தன்மையாக விளங்கின. (கசு)

பயிற்றிய முகிலிடைப் பரந்த பான்மதி
வெயிற்றியங் கியவென வெந்த கிற்புகை
யயிற்றிய வெயிலுமிழ் அரிய மாமணி
குயிற்றிய மாடங்கள் குளிர நாறுமே.

(க - ரை.) முகிலிடைத் தோன்றும் நிலவு ஒளிவிடுவது போல மகளிர் நீராடிய பின்பு கூந்தலுக்கு ஊட்டும் அகிற்புகைப் பரப்பினுள் மணிபதித்த மாடங்கள் ஒளிவிட்டு நறுமணத்துடன் தோன்றும்.

(பொ - ரை.) தவழ்ந்து தவழ்ந்து பழகிய மேகப் பரப்பினிடை ஒளிவீசும் வெண்ணிலாவின் ஒளிப்பரப்பு விளங்குவதுபோல, மகளிர் நீராடிய பின்பு மேல்மாடங்களி லிருந்து கூந்தலுக்கு ஊட்டும் எரிக்கப்பட்ட அகிற்கட்டை யின் புகைப்படலத்தை உண்ட மாடங்கள் தம்மிற் பதிக்கப் பட்ட ஒளி உமிழ்கின்ற அரிய பெரிய மணியொளியொடு குளிர மணக்கும்.

நாறும் - மணக்கும்; தோன்றும்.

முகிற்பரப்பில் நிலாவொளி திகழ்வதுபோல் அகிற் புகைப் பரப்பில் மணிமாடங்களின் மணியொளி தவழ்ந்து தோன்றும். (கஎ)

புலையினர் மனஇணை வளைவில் பொன்னங்கால்
தலையினர் மனவினை தரித்த பூங்கொடி
கலையினர் மனஇணை வெளிறு கான்றுக
முலையினர் மனஇணை முயன்றங் காடுமால்.

(க - ரை.) புலைஞர் மனம்போல் வளையாத பொற்கம் பத்தின் உச்சியில் கட்டிய கொடி கலைஞர் மனம்போல் வெளிற் றைப் புறம்போக்கி மங்கையர் மனம்போல் ஆடும்.

(பொ - ரை.) புலைருடைய மனத்தையொத்த வளை வில்லாத பொன்னிறமுள்ள அழகிய மூங்கிற் கம்பத்தின் உச்சியின்மேல் பொருந்திய துகிலால் கட்டப்பட்ட அழகிய கொடி கற்ற கலைஞரின் மனம்போல் வெளிற்றைப் புறம் போகச்செய்து மங்கையர் மனம்போல் முயன்று ஆடும் என்க. (கஅ)

கோதகன் றளிக்குவார் அருத்திக் கோள்கைபோல்
தீதகன் றருந்திரு நகரச் சேன்மினேன்
றேதகன் றணிக்குலத் திலங்கு மாடங்கள்
யீதகன் றசைகோடி விளிப்ப மானுமே.

(க - ரை) மணி மாடங்களின்மேல் அசைகின்ற கொடிகள் குற்றமற்ற வள்ளல்கள் வழங்கும் செல்வத்தைப் பெற்று நகர வாருங்கள் என்று அழைப்பனபோல விளங்கும்.

(பொ - ரை.) குற்றமின்றி வழங்குபவரின் ஆர்வத்தின் இயல்புபோல், தீதின்றி அரிய செல்வத்தைப்பெற்று நகர வாருங்கள் என்று குற்றம் இன்றி அழகிய மணிகளின் கூட்டத்தால் பொலிவு பெற்று விளங்கும் மாடங்களின் மேல் விரிந்து அசைகின்ற கொடிகள் அழைப்பனபோல் விளங்கும். (கசு)

பேர்த்தன பருதிபோய்ப் பெருகும் மாஇரா
போர்த்தன இருளறத் தயங்கும் போன்மணி
கோர்த்தன தரளமேல் கொளுவுந் தோரணம்
ஆர்த்தன முகிலிடை அவிர்வில் மானுமே.

(க - ரை.) ஞாயிறுமறைய வந்துபோர்த்த இருளைவிலக்கி விளங்கும் மணித்தோரணங்கள் மேகபடலத்தில் தோன்றுகிற வானவிட்லை யொக்கும்.

(பொ - ரை.) ஞாயிறு பெயர்ந்துபோய் மறைய வந்து பெருகிய பேரிரவில் மொய்த்த இருளை விலக்கி விளங்குகின்ற மணிப்பொன் தரளங்கள் கோத்துக் கட்டிய தோரண ஒழுங்குகள், முழங்குகின்ற முகிற்படலத்தில் விளங்குகின்ற வானவில்லைப்போல் விளங்கிற்று. (உo)

தேஞேடும் ஞிமிறேடும் செறிந்த தும்பிகள்
வாஞேடு வழங்கிய மலர்செய் தோரணம்
காஞேடு வழிந்ததேன் களித்து மொய்த்தபின்
ஆஞேடும் இசையோடும் ஊஞ்சல் ஆடுமோல்.

(க - ரை.) பூந்தோரணங்களில் வாசனையோடு வழிந்த தேனைப் பருகிக் களித்து மொய்த்த வண்டினம் இசையோடு ஊஞ்சலாடின.

(பொ - ரை.) தேன்வண்டொடும் கருவண்டொடும் கலந்த தும்பிகள், வானத்தொடு பொருந்திய மலர்த் தோரணங்களிலிருந்து மணத்தொடு வழிந்த தேனைக் குடித்துக் களித்து மொய்த்த பின்பு இன்பத்தொடும் இசையொடும் ஊஞ்சலாடுவனவாயின. ஆன் - இன்பம் (உக)

கரியினம் கரியோடும் கலினம் பூண்டுபாய்
பரியினம் பரியோடும் பரியைப் பூட்டிய
எரியின மணிசெறி ஏமத் தேர்களும்
நெறியின நெருங்குப நெரிந்த வாயெலாம்.

(க - ரை.) யானை குதிரை தேர் இவைகள் கூட்டங் கூட்டமாக இடந்தொறுஞ் சாய்ந்து நெருங்கிச் சென்றன.

(பொ - ரை) யானைக் கூட்டத்தொடு யானைகளும், கடிவாளம் பூண்டு பாய்கின்ற குதிரைக் கூட்டத்தொடு குதிரைகளும், குதிரை பூட்டிய ஒளியையுடைய மணி பதித்த பொற்றேர்களும், நெரிசலாகச் சாய்ந்த இடங்களெல்லாம் நெருங்கின. (உஉ)

பேரொலி முரசொலி பிளிர்ந்த சங்கொலி
தேரொலி மதமழை சிதறி யானைகள்
ஊரொலி இவுளிகள் ஒலிம யங்கிமேல்
காரொலி கடலொலி கலங்க விம்முமால்.

(க - ரை.) முரசு முதலியவற்றின் ஒலி காரொலியும் கடலொலியும் மயங்க எழுந்தோங்கும்.

(பொ - ரை.) மிக்கொலிக்கும் முரசொலியும், முழங்குகின்ற சங்கினொலியும், தேரொலியும், மதநீராகிய மழையைச் சிதறிக்கொண்டு வருகின்ற யானைகளை ஏறி நடாத்துகின்ற ஒலியும், குதிரைகளின் ஒலியும் ஆகிய ஒலிகளெல்லாம் சேர்ந்து வானத்து முகில் ஒலியும் மண்ணகத்துக் கடல் ஒலியும் பின்னிடும்படியாக எழுந்தோங்கி விம்முகின்றன. (உ௩)

போதிர்படு மணியொலி பொருநர் சாய்தலோ
டெதிர்படு முடியொலி யிரங்கி யாழொலி
கதிர்படுஞ் சிலம்பொலி கழல்கு லாவொலி
அதிர்படும் வெருவற இனிதில் ஆர்த்தன.

(க - ரை.) மணியணிகளின் ஓசையும் அரசரின் உரசுகின்ற முடிகளின் ஓசையும் யாழோசையும் சிலம்போசையும் கழலோசையும் அச்சமற இனிதாக ஆர்த்தன.

(பொ - ரை.) மணிபதித்த அணிகலன்கள் ஒன்றோடொன்று மிகுதியாக மோதுதலினால் உண்டாகும் ஒலியும், அரசர்கள் எதிர்ப்பட்ட அரசர்களின்மேல் நெருங்கிச் சாய்தலினால் உராய்ந்த மணிமுடிகளின் ஒலியும், இனிதாக ஒலிக்கின்ற யாழின் ஒலியும், ஒளிவீசுகின்ற சிலம்பின் ஒலியும், ஆடவர்களின் கால்களில் ஆடுகின்ற வீரக்கழல்களின் ஒலியும் நடுக்கஞ் செய்யும் அச்சமற இனிமையாக ஒலித்தன. (உச)

நெரிந்தன குடைகொடி நிசியைச் செய்யஆங்
கெரிந்தன கலனொடும் இரும்பொன் மாமுடி
திரிந்தன வயின்றொறும் தெளிந்த நண்பகல்
புரிந்தன புரியெலாம் பொருவில் வாழவே.

(க - ரை.) அங்நகர் முழுதும் ஒப்பின்றி வாழக் குடையும் கொடியும் நெருங்கி இருள்செய்ய அணிகலனும் பொன்முடியும் ஒளிசெய்ய (இரவினையும்) நண்பகலையும் செய்தன.

(பொ - ரை.) ஒன்றோடொன்று நெருங்கின குடையும் கொடியும் இருள்செய்ய, ஒளிவிடும் அணிகலன்களும்

மிக்க பொன்னாற் செய்த மாமுடிகளும் சுற்றிய இடங்கள் தோறும் தெளிந்த நண்பகலைச் செய்ய இவை அந்நகர் முழுதும் ஒப்பின்றி வாழச் செய்தன. (உரு)

சங்கிட விம்மிய தரள மோடியை
கோஞ்சிட விம்மிய கோதை யார்மது
போங்கிட விம்மிய அளிபோ சித்திசை
யங்கிட விம்மிய இன்பம் அந்நகர்.

(க - ரை.) முத்துமாலையோடணிந்த மலர் மாலைகள் பொழிந்த தேனையுண்டு வண்டு இசைபாட நகரெல்லாம் இன்பம் மலிந்தன.

(பொ - ரை.) சங்கின்ற மிக்க முத்துக்களினாலாகிய மாலைகளோடு அணிந்த மணம் பரப்புகின்ற மிக்க பூமாலை களில் நிறைந்த தேனை நெருங்க மிகுந்த வண்டினங்கள் பருகி இசைபாட இன்பம் மலிந்தன அந்நகரில்.

மலர்மாலைகளில் உள்ள தேனையுண்டு வண்டினங்கள் பாடும் இசையைக்கேட்டு மக்கள் மகிழ்ச்சியுற்றனர். இயங்கிட என்பது முதற் குறையாய் 'யங்கிட' என்று வந்தது. (உசு)

நாறிய நானமும் நறும்அ கிற்புகை
ஊறிய கானமும் உரைத்த சந்தமும்
வீறிய மதுமலர் மிடைந்த வாசமும்
தேறிய வெறியோடு செறிந்த அந்நகர்.

(க - ரை.) கத்தூரி மணமும், அகிற்புகையிலே தோய்ந்த மணமும், சந்தன மணமும், மலர்மணமும் ஆகிய மணம் நகர் முழுதும் செறிந்து விளங்கும்.

(பொ - ரை.) மணக்கின்ற கத்தூரி மணமும், நறுமண முள்ள அகிற்புகையிலே தோய்ந்த பொருள்களின் மண மும், உரைத்த சந்தனத்தின் மணமும் சிறந்த தேன் உள்ள மலரின் மிகுந்த மணமும் செறிந்த மணத்தொடு நிரம்பின அந்நகரிலுள்ள இடங்கள். (உஎ)

பூந்துறைத் தெரியல்கள் பொழிந்த தேறலும்
காந்துறைத் தசும்பிடை கமழும் நீரமும்
தேன்துறைக் குங்குமத் தெளிந்த சுண்ணமும்
ஆந்துறைத் திரள்மணத் தார்த்த அந்நகர்.

(க - ரை) மாலைகள் பொழிந்த தேனும் பொற்குடத்துப் பனிநீரும் குங்குமம் முதலிய சுண்ணங்களும் ஆகிய கூட்டங்களின் மணத்தால் அந் நகரிடங்கள் நிரம்பின.

(பொ - ரை.) பூவகைகளாலாகிய மாலைகள் பொழிந்த தேன் மணமும், விரும்புந் திறத்தனவாகிய பொற்குடங்களிலிருந்து கமழும் பனிநீர் மணமும், மணவகைகள் அமைந்த குங்குமம் முதலிய நன்றாயமைந்த நறுமணப் பொடிகளின் மணமும் ஆகிய பலவகை மணங்களும் அந் நகரிடங்களிலெல்லாம் மணம் செய்து நிரம்பின.

*காந்துறை - காம் துறை விரும்பும் வகை. காம் - விருப்பம். சாமம் என்பது காம் என்றாயிற்று.* (உ அ)

தேசுசூழ் செந்துகிர் திருந்துங் காலின்மேல்
காசுசூழ் தமனியக் கம்ப லந்திரைத்
தூசுசூழ் நித்திலந் துதைந்த குஞ்சுகள்
பாசுசூழ் மணிச்சுவர் படுக்கு மாடமும்.

(க - ரை.) பவழத் தூண்கள்; மணியொளி சூழ்ந்த பொன்னாலாகிய மேற்பரப்புத் திரைகள்; திரைகளைச் சுற்றி முத்துக் குஞ்சங்கள்; பசுமணிச் சுவர்கள் அமைந்த படுக்கையறையுள்ள மாடங்கள்.

(பொ - ரை.) பொன்னாற் சூழப்பட்ட திருத்தமான செம்பவளத் தூணின்மேல், மணிசூழ அமைந்த செம்பொன்னாலாகிய மேற்பரப்புத் திரையும், திரையாடைகளைச் சூழ்ந்து தொங்கும் முத்துக்களாலாகிய நெருங்கிய குஞ்சங்களும் உள்ளேயமைய பசுமையொளி சூழ்ந்த மரகதமணிச் சுவர்கள் அமைந்துள்ளன படுக்கின்ற மாடங்களுக்கும்.

*படுக்கை யறையின் சிறப்பினைக் கூறவே நகரின் செல்வச் சிறப்பு நன்கு விளங்கும்.* (உக)

பொருந்தலர் உரத்தோளி போசித்த வாளோடும்
விருந்தமர் புள்ளினம் விழைந்த வேலோடும்
வருந்தமர் கடந்தவில் மழுவி னேடுமற்
றிருந்தமர் படைக்கலம் இருக்கும் மாடமும்.

(க - ரை.) வாள், வேல், வில், மழு முதலிய படைக்கலம் உள்ள மாடங்களும் உண்டு.

(பொ - ரை.) பகைவரின் மார்பில் பாய்ந்து ஒளி யுண்ட வாட்படைகளும், புதுப்புலால் நுகர அமர்ந்த பறவைக் கூட்டங்கள் விரும்பிய வேற்படைகளும், வருத்த மான போரை வென்ற விற்படைகளும், மழுப்படைகளும் மற்றுமுள்ள படைக்கலங்களும் உள்ள சாலைகளும். அல்லது வேறு சாலை இல்லையே என்று ௬௭ஆவது பாடலில் பொருள் முடிவுபெறும். (௬௦)

நீல்மணி மரகதம் நித்தி லந்துகிர்
வேல்மணி வயிரம்கோ மேத கம்மிளிர்
பார்மணி பரும்வயி டூரி யம்படர்
வால்மணி மாணிக்கம் வைக்கும் மாடமும்.

(க - ரை.) நீலம் முதலிய ஒன்பான் மணிகளும் அமைந்த மணிச் சாலைகளும்.

(பொ - ரை.) நீலமணியும் மரகதமணியும் முத்தும் பவழமும் வேல்போல் கூர்மையான பட்டங்களுள்ள வயிர மணியும் கோமேதகமும் மிளிர்கின்ற பால்மணியாகிய புட்பராகமும பருத்த வயிடூரியமும் ஒளிபடர்ந்த சிறந்த மாணிக்கமணியும் ஆகிய இவைகள் உள்ள நவமணிச் சாலை களும். (௬க)

ஒன்னலர் இறைகோணர்ந் துற்ற அம்பொனும்
துன்னலர் மலைவயின் துதைந்த பைம்பொனும்
மின்னலர் புனல்கோணர் மிடைந்த செம்பொனும்
இன்னலர் நிதியெலாம் இருக்கும் மாடமும்.

(க - ரை.) திறைதந்த பொன்னும் மலைதந்த பொன்னும் புனல்தந்த பொன்னும் உள்ள பொற்சாலைகளும்.

(பொ - ரை.) பகைவர் திறையாகக் கொண்டுவந்து தந்த அழகிய பொன்னும் நெருங்கிய மலர் நிறைந்த மலையிற் செறிந்துகிடந்து எடுக்கப்பட்ட பைம்பொன்னும் ஒளிர்கின்ற பரந்த ஆற்றுப்புனல் கொண்டுவந்து தந்த மிகுந்த செம்பொன்னும் ஆகிய இனிமை மிகுந்த நிதியங்களெல்லாம் இருக்கும் சாலைகளும். (௯௨)

அவ்வியம் ஒழித்தருள் அளிக்கு மாமறை
திவ்விய மதுரநூல் செப்புஞ் சாலையும்
நவ்விய வுணர்வுறி யெவையும் நாடியுள்
வவ்விய பலகலை வகுக்கும் சாலையும்.

(க - ரை.) மாமறைநூல் உணர்த்தும் சாலையும் பலகலைகள் உணர்த்தும் கல்விச் சாலைகளும்.

(பொ - ரை.) பொறாமையை நீக்கி அருளைத் தருகிற பெருமையுள்ள மதிக்கத்தக்க இனிய நூலாகிய வேதத்தை அறிவுறுத்துகின்ற சாலையும், அழகிய உணர்வு அடைந்து எவற்றையும் உள்ளே ஆராய்ந்து மனங்கொள்ளுதற்குரிய பலவகைக் கலைகளையும் வகைப்படுத்திக் கற்பிக்கும் சாலையும். (௯௩)

பேற்றியார் குணில்கவண் பேரும்வில் நேமியோர்
குற்றிலாக் குறிப்படக் குமுறுஞ் சாலையும்
வேற்றியா ரலங்கல்வாள் முதற்பல் வேற்படை
பற்றிலார் வெருவுறப் பழக்குஞ் சாலையும்.

(க - ரை.) குறுந்தடி கவண் வில் சக்கரம் இவை பழகுஞ் சாலையும் வாள் வேல் முதலியன பழகுஞ் சாலையும்.

(பொ - ரை.) திரண்ட தன்மை நிறைந்த குறுந்தடியும் கவணும் பெரிய வில்லும் சக்கரமும் ஒரு குற்றமும் இல்லாத பிற படைகளும் குறிப்புத் தைக்கும்படி பழகிக் குமுறுகின்ற சாலையும, வெற்றிமிக்க மாலை சூழ்ந்த வாள் வேல் முதலிய பலவகைப் படைகளும் பற்றில்லாத பகைவர் அஞ்சப் போர்ப் பயிற்சி கற்பிக்கின்ற சாலைகளும். (௯௪)

கானல கனியினுங் கனிந்த யாழொடு
தேனல பல்லியந் திளைக்குஞ் சாலையும்
பானல மொழித்தபாப் பாடி யாடிவிண்
மேனல மெனவொலி விம்முஞ் சாலையும்.

(க - ரை.) யாழும் பல்லியமும் முழங்கும் சாலையும் ஆடல் பாடல் நிகழும் சாலையும்.

(பொ - ரை.) மணமுள்ள நல்ல கனியினுங் கனிந்த யாழோடு, தேனினும் இனிய பலவகை வாத்தியங்களும் முழங்குஞ் சாலைகளும், பாலின் நலத்தையும் கடந்த பாடல் களைப் பாடியாடி வானுலகின் மேலான நலமென ஒலிமிகுஞ் சாலையும். (௩௫)

மாற்றர சினமிறை வணங்குஞ் சாலையும்
வேற்றர சினந்திறை விசிக்குஞ் சாலையும்
ஏற்றர சினமினி திருக்குஞ் சாலையும்
போற்றர சினத்துமாண் பொருத்துஞ் சாலையும்.

(க - ரை.) மாற்றரசு வணங்குஞ் சாலையும் திறைப்பொருள் கொண்டுவந்து கட்டும் சாலையும் ஏத்தும் அரசர் இருக்கும் சாலையும் போற்றிய அரசர் பரிசில் பெறுஞ் சாலையும்.

(பொ - ரை) பழம்பகையாயிருந்த அரசர் கூட்டம் வந்து அரசனை வணங்குஞ் சாலையும், வேற்றரசுகளின் கூட்டம் வந்து திறை கட்டும் சாலையும், அரசனை ஏற்று கின்ற (துதிக்கின்ற) அரசர் கூட்டம் மகிழ்வுடனிருக்குஞ் சாலையும் அங்ஙனம் போற்றுகின்ற அரசுகள் மாண்புள்ள பெரும் பொருள்களைப் பெறுகின்ற சாலையும். (௩௬)

ஆமுறை முகிலென வளிக்கும் வான்பொருள்
மீமுறை திருந்திட விரும்பி யாவரும்
தாமுறை யிடமெலாந் தருமச் சாலையாய்
ஏமுறை சிறந்ததோர் சாலை இல்லையே.

(க - ரை.) முற்கூறிய சாலைகளோடு ஒவ்வொரு வீடும் புயல்போற் கொடுக்கும் அறச்சாலையாகவே அமைந்திருந்தது.

(பொ - ரை.) மழைநீரைப் பொழிகின்ற மேகம் போன்று சிறந்த பொருள்களை வழங்கும் மேலான முறைமை செவ்வையாக நடைபெற விரும்பி எல்லோரும் தாம் தங்கியிருக்கும் வீடுகள் எல்லாவற்றையுமே தருமச் சாலையாய் ஆக்கிக்கொண்டமையால் வழங்கும் பொன் னுறைகின்ற சிறந்ததோர் அறச்சாலை வேறாக இல்லை.

ஆம் - நீர். உறை - துளி. ஈண்டு மழையைக் குறித்தது. எமுறை - எம்+உறை. எம் - பொன். ஏமம் என்பதன் விகாரம். (கஎ)

பணிச்சுவர்ச் சாலையும் பவழப் பந்திக்கால்
தணிச்சுவர்ச் சாலையும் தரளக் கோத்துடை
மணிச்சுவர்ச் சாலையும் வளைத்த தேவமா
அணிச்சுவர்க் கோயிலை அறைய லாமரோ.

(க - ரை.) அணிசூழ் சுவர்ச்சாலையும், நிரையமை பவழத் தூணைச் சூழ்ந்த சுவர்ச் சாலையும், முத்துக்குஞ்சங்கள் தூக்கின மாணிக்கச் சுவர்ச்சாலையும் ஆகிய இவற்றால் சூழப்பட்ட பேரணி யைச் சூழ்ந்த தேவாலயத்தின் இயல்பு கூறுவாம்.

(பொ - ரை.) ஓவியப் பணியையுடைய சுவர் சூழ்ந்த சித்திர மண்டபமும், நிரலாயமைந்த பருத்த பவழத் தூண்களைச் சூழ்ந்த சுவருடைய பவழக்கால் மண்டபமும், முத்துத் தொங்கலமைந்த மாணிக்கச் சுவருள்ள மணிமண்டப மும், ஆகிய இவற்றால் சூழப்பட்ட பேரணியுள்ள சுவர்கள் சூழ்ந்த பேரத்தாணி மண்டபமும் உள்ள தேவகோயிலைப் பற்றி இனிமேற் கூறலாம்.

அரோ : அசை. (கஅ)

வேறு

மண்ணிய முடியோ முடியின்மா மணியோ
வானிடை வயங்குசெஞ் சுடரோ
புண்ணிய உடலத் துயிர்கோலோ முகமோ
போலமுகக் கண்கோலோ யாதோ

கண்ணிய அளவற் றிடமெலாம் நிறைந்த
கடவுள்தான் உறைந்தருள் காட்டப்
பண்ணிய அம்மா நகரிடைப் பகலைப்
பழித்தெரி பரந்தவா லயமே.

(க - ரை.) இறைவன் அருள்புரியத் தேர்ந்துகொண்ட அந்நகரத்தில் அமைந்த தேவாலயம் தெய்வத் திருமுடியோ முடி மணியோ செங்கதிரோ புண்ணிய வானின் உயிரோ அவன் முகமோ அவன் கண்களோ என்று சொல்லத்தக்க வனப்புடையது

(பொ - ரை.) அணிசெய்த திருமுடியோ முடியிலமைந்த மாமணியோ வான்வெளியில் விளங்குகின்ற செங்கதிரோ புண்ணியஞ் செய்ய எடுத்த உடலிலுள்ள உயிரோ அவ்வுடலின் முகமோ அவ்வழகிய முகத்திலுள்ள கண்ணோ எதுவென்கோ? கருதிய அளவெல்லாங் கடந்து மூவுலகிலுள்ள இடமெலாம நிறைந்திருக்கும் கடவுள் தான் சிறப்பாக இருந்து அருள்செய்ய இயற்றிய அந்த மாநகரத்தில் பகலையும் வென்ற ஒளிபரந்த ஆலயத்தை. (௯௯)

பொற்பொதிர் வயிரக் கான்மிசைப் பவளப்
போதிகை பொருந்திய தொருபால்
விற்பொதிர் துகிர்க்கால் மரகத மணியால்
விளங்கிய போதிகை யொருபால்
எற்பொதிர் நிதிக்கால அமைந்தபோ திகையாய்
இனமணி கிடத்திய தொருபால்
செற்பொதிர் மின்னின் மின்னிமுன் நிரையில்
செறிந்தபல் மண்டப நிலையே.

(க - ரை.) வயிரத்தூணில் பவளப் போதிகையும் பவளத் தூணில் மரகதப் போதிகையும் தங்கத் தூணில் மணிப்போதிகையும் அமைந்து மின்னல்போல் மின்னிச் செறிந்தன பல மண்டபங்கள்.

(பொ - ரை.) பொன் மிகுதியாய் இசைந்த வயிரத் தூணின்மேல் பவளப் போதிகை பொருத்தப்பட்டது ஒரு

பக்கம்; ஒளிமிக்க பவளத் தூணின்மேல் மரகதமணியாற் செய்து அமைக்க விளங்கிய போதிகை ஒருபக்கம்; ஒளி பொருந்திய தங்கத் தூணின்மேல் அமைந்த போதிகையாக மணிவகைகளால் அமைக்கப்பட்டது ஒருபக்கம்; செல்லாகிய மேகத்திலிருந்து மிகுதியாய் மின்னுகின்ற மின்னல் போல் ஒளிவிட்டுக் கோவிலின்முன் நிரையாகப் பொருந்திய பல மண்டபங்களின் நிலை இதுவாகும். (சo)

சேம்பொனால் அம்பொன் மேலெழுத் தரிதில்
தீட்டிய அழகெனத் தெளிந்த
அம்பொனால் இசைத்த மணிச்சுவர் ஏற்றி
யருந்தொழிற் றச்சரும் நாண
பைம்பொனால் இழைத்த சிகரம்வான் ஓட்டப்
பட்டடென அவ்வுல கத்தோர்
கம்பொனால் வனைந்த தொழிலையிவ் வுலகில்
கைவிடாக் காட்டினர் போன்றே.

(க - ரை.) பொன்னொடு இழைத்த மணிச்சுவரால் செய்யப்பட்ட கோவிற் சிகரம் வானமுகட்டை அளாவி நிற்க அவ்வுலகத்தோர் சிறந்த பொன்னாற் செய்த தமது தொழிலை இவ்வுலகத்திற்குக் காட்ட விரும்பிக் கையாற் பிடித்து விடாமற் காட்டுவது போன்றது.

(பொ - ரை.) பைம்பொன்மேல் செம்பொன்னால் அருமையாக எழுத்துப் பொறித்ததுபோல, தெளிந்த அழகிய பொன்னை உருகவிட்டு மாணிக்கச் செங்கல் வைத்துச் சுவரை வளர்த்து, அரிய தொழில்வல்ல தச்சரும் நாணும்படியாகப் பைம்பொன்னாற் செய்தமைத்த முடி வானளாவி நின்றதாக அந்த உலகத்தோர் சிறந்த பொன்னால் வனைந்த தமது தொழிலை இவ்வுலகினர்க்குக் காட்டுவதற்காகக் கையாற் பிடித்து விடாமற்காட்டியது போன்றது அந்த முடி.

எருசலேம் என்னும் நகரில் அமைந்திருந்த தேவாலயத்தின் மணிமுடி விண்ணுலகைத் தொட்டுக் கொண்டு இருந்த தோற்றம் இவ்வாறு இருந்தது. (சக)

வையகத் துள்ளோ ரேறவும் விரும்பி
வானவர் இழியவும் வழிஎன்று
ஐஅகத்து ஒளிர்வான் பயந்தஆ லயமே
அந்தரத்து உயர்தலை சாய்ந்து
கையகத் ததனைக் கடவுடான் தாங்க
களித்துயாக் கோபுஎன் பாற்குஅங்கண்
துய்அகத்து எழிலோர் இழிந்து எழுந்து உலவத்
தோன்றிய ஏணியைப் போன்றே.

(க - ரை.) ஆலயம் வானுலகளவும் வளர்ந்து சாய்வாகக் காணப்படும் தோற்றம் உலகத்தார் ஏறவும் வானுலகத்தார் இறங்கவும் இறைவன் கையினுற் பிடித்துத் தொங்கவிட்ட ஏணி யாக்கோபிற்குக் காட்சியளித்தது போலும்.

(பொ - ரை.) வையகத்துள்ளோர் வானகத்துக்கேற வும் வானகத்தார் விரும்பி வையகத்துக்கு இறங்கவும் வழியாகுமென்று, அழகொடு ஒளிர்கின்ற வானுலகத்திற் குப் பாய்ந்து உயர்ந்த அந்த ஆலயம், வானவெளியில் உயர்ந்த உச்சி சாய்வாய்க் காணப்பட்டுத் தூயவர் வானுல கேறியும் இறங்கியும் உலாவக் கடவுள் தம் கையினுற் பிடித்துத் தொங்கவிட்ட ஏணி யாக்கோபு என்பாற்குத் தோன்றிய காட்சியே போலும். (சஉ)

தூண்டொடர் பொலிந்த முகட்டுயர் விளங்குந்
தூயபொற் றகட்டுமேற் படர்ந்த
சேண்டொடர் பருதி தன்கதிர் படலிற்
செறிந்தபல் லணியணி கிளர்ந்த
பூண்டொடர் அணியார் தனதுருக் கண்டு
பொருவில்தோற் றுட்கெனச் சாய
மாண்டொடர் இரவி ஆயிரம் என்ன
வயங்கும்அவ் வாலயம் மாதோ.

(க - ரை.) தூண் வரிசையின்மேற் பொலிந்த முகட்டில் அமைந்த பொற்றகட்டின்மேல் அணிகளில் கதிரவனின் உருவம் அணியணியாகத் தோன்றி விளங்க ஞாயிறு அதுகண்டு தன்னை

வென்ற அவ்வுருவங்களுக்குத் தோற்றுச் சாய்வதுபோற் சாய மாண்பு பொருந்திய ஆயிரம் கதிரவன் உண்டு என்னும்படியாக அந்த ஆலயம் விளங்கியது.

(பொ - ரை.) தொடர்ந்த தூண்களின்மேற் பொலிந்த முகட்டின் உச்சியில் விளங்கும் தூய பொற்றகட்டின்மேல் பரந்த செய்மையிலே தொடர்ந்து செல்கின்ற ஞாயிற்றின் கதிர் படுதலினால், நெருங்கிய பல அணியணியாய் விளங்கிய அணிகளின் வரிசையில் சென்று பொருந்திய தன் உருவத்தைக் கண்டு ஒப்புமைக்கு நில்லாமல் தோற்று உட்கினது போல ஞாயிறு சாயப் பெருமை பொருந்திய ஞாயிறு ஆயிரம் என்று சொல்லும்படியாக அந்த ஆலயம் விளங்குகின்றது என்பது. (சங)

துன்னரு மெழில்செய் யின்புணும் விழிக்குஞ்
சுருதிநூல் இனிதினிற் காட்டப்
பொன்னரு மிழையால் நிரைநிரை சுவரில்
புடைத்தெழப் பலவுருக் கிளம்ப
உன்னரும் வனப்பிற் கிளரொளி வாய்ந்த
உயிர்பெறச் சித்திரம் தீட்டி
இன்னருங் கவின்கண் டயர்வுறீஇ உரையும்
இமைப்புமில் லாயின மாதோ.

(க - ரை.) விழிக்கு விருந்தாக வேத ஓவியங்களைப் பொன்னாற் செய்து அமைத்தனர்; அவை கோயிலின் இனிய அரிய அழகு கண்டு வியந்து அயர்ந்து பேச்சும் இமைப்பும் இல்லாமல் ஆயின போன்றன.

(பொ - ரை) காதினாற் கேட்டு உணரும் வேத நூற் பொருளை, கிட்டுதற்கரிய அழகு செய்கின்ற இன்பத்தை உண்ணும் கண்களுக்கும் இனிதாகக் காட்டப் பொன்னாலாகிய அரிய உருவ நகையால் வரிசை வரிசையாகச் சுவரிலமையத் தட்டி எழச் செய்ய, பல அரிய உருவங்கள் தோன்ற, நினைத்தற்கரிய வனப்பினையுடைய சிறந்த ஒளி வாய்ந்த உயிருள்ளன போன்ற ஓவியங்களைத் தீட்ட, அவை திருக்கோவிலின் இனிய அரிய அழகினைக் கண்டு வியந்து

அயர்ந்து பேச்சும் கண்ணிமைத்தலும் இல்லாதன போலா யின என்பது. (சச)

வான்மணி விளக்கோ ராயிரம் இழைத்த
மரகதத் திருளறக் கற்றை
கான்மணி விளக்கோ ராயிரம் பவளங்
கலந்தமுத் தணியணி தயங்க
நீன்மணி விளக்கோ ராயிரம் பசும்போன்
நிலைவிளக் காயிரம் வயிரப்
பான்மணி விளக்கோ ராயிரம் எவணும்
பகலவன் படப்பகல் செயுமால்.

(க - ரை.) மணிவிளக்காயிரம், மரகதவிளக்காயிரம், பவளமும் முத்துங் கலந்து தொங்குவதற்கிடையே தூங்கும் நீலமணி விளக்காயிரம், பொன்விளக்காயிரம், வயிரவிளக்காயிரம் எங்கும் ஞாயிற்றினும் மேலாக ஒளிசெய்வனவாயின.

(பொ - ரை.) தூய மாணிக்க விளக்கோராயிரம்; இருள் நீங்க ஒளிக்கதிர்களைக் காலுகின்ற மரகத மணியால் ஆக்கிய விளக்கோராயிரம்; பவளமும் முத்தும் கலந்து கோவையாகத் தூங்க விளங்குகின்ற நீல மணியாலாகிய விளக்கு ஓராயிரம்; பசிய பொன்னாலாகிய நிலையான விளக்கு ஓராயிரம்; வயிரத்தாலிழைத்த வெள்ளிய அழகிய விளக்கோராயிரம் எங்கும் ஞாயிற்றின் ஒளியினும் மேலாக ஒளி செய்வனவாயின. (சடு)

தீயெரி வாய்ந்த குருமணி யாதி
செறிந்தபன் மணிகளும் அகன்ற
வாயெரி விளக்கின் தொகுதியும் மல்கி
வயின்வயின் எரிந்தபைம் பொன்னும்
ஆயெரி திரண்டு விழித்தகண் கூச
அகில்முதல் நறும்புகை நாளும்
மீயெரி சுடரை இளமுகில் மூடி
வேய்ந்தெனக் குளிரவேய்ந் தனவே

(க - ரை.) நெருப்பினுஞ் சிவந்த மாணிக்கம் முதலிய மணி யொளியுள்ள இடத்தில் உள்ள விளக்கின் தொகுதியும் இடந் தோறும் பசும்பொன்னின் ஒளியும் விழித்த கண் கூசுமாறு ஒளி வீச ஞாயிற்றை இளமுகில் மூடியதுபோல் அகில் முதலிய புகை பரவி மூடிக் குளிரச் செய்யும்.

(பொ - ரை.) நெருப்பினைப்போல் ஒளி வாய்ந்த சிவந்த மாணிக்கம் முதலிய பலவகை மணிகளும் ஒளி விரிக்கும் இடத்தில் உள்ள விளக்கின் தொகுதியும் மிக்கு இடந்தொறும் இடந்தொறும் ஒளிர்கின்ற பசிய பொன்னும் மிகுந்த ஒளியாகத் திரண்டு விழித்த கண் கூசச் செய்ய, அகில் முதலியவற்றின் நறுமணமுள்ள புகைகள் நாடோ றும் மேலே ஒளிர்கின்ற செங்கதிரை இளமுகில் மூடி யது போன்று குளிரும்படியாக மூடியது என்க. (சக)

முருடோடு பம்பை யோலிவயிர் ஒலிவன்
முரசோடு வளையோலி யோலித்த
தேருடோடு மினிய குழலோலி வீணை
செறியோலி கின்னரத் தோலிநன்
மருடோடு மதுரப் பல்லியம் ஒலிப்ப
மாகதர் பாவோலி யிசைந்திவ்
வருடோடு மோலிகள் கடலோலி யோழிக்கும்
அரியஇன் பிருசெவி மாந்த.

(க - ரை.) இரு செவியும் மாந்தும்படியாக முருடு பம்பை ஊதுகொம்பு சங்கு குழல் வீணை கின்னரம் பல்லியம் இவை யொலிப்ப இவற்றோடு மாகதர் பாடலொலியுங் கூடி கடலின் முழக்கத்தையும் அடக்கும்.

(பொ - ரை.) முருடும் பம்பையும் ஒலிக்கும் ஒலியும் ஊது கொம்பின் ஒலியும் வலிய முரசு சங்கு இவற்றின் ஒலியும் தெளிந்த இனிய குழலொலியும் வீணையின் பொருந் திய ஒலியும் கின்னரத்தின் ஒலியும் ஆகிய இவற்றோடு நன்றாய் மயங்கிப் பல இனிய வாத்தியங்களும் ஒலிக்கப் புகழ்வோரின் பாடலொலியும் சேர்ந்து இந்த அருள்

தோடும் ஒலிகள் கடலொலியும் அடங்குமாறு ஒலிக்க அவற்றின் அரிய இன்பத்தை இரு செவியும் பருக என்பது. (சஎ)

பூமழைத் திரளு நாறிய கலவை
பொழில்தரக் கமழு நீர்த்திவலைத்
தேமழைத் திரளு மாங்குதஞ் சிறுமை
தீர்த்தநா தனைப்புகழ் பவர்வாய்ப்
பாமழைத் திரளுங் கன்னியர் கனிய
பாமழைத் திரளுமேஞ் ஞான்றும்
மீமழைத் திரளு மெலிதர விம்மி
விண்ணுமேற் குளிர நாறினவே.

(க - ரை.) பூமழையும் பனிநீர் மழையும் பாமழையும் மிகுந்து வான மழையும் நாணப் பொழிந்தன.

(பொ - ரை.) பூமழையின் திரளும் நறுமணமுள்ள கலவையோடு கூடி மணக்கும் பனிநீர்த் திவலையாகிய இனிய மழைத் திரளும் தம் சிறுமையைப் போக்கியருளிய கடவுளைப் புகழ்பவர்களின் பாமழைத் திரளும் கன்னியர் பாடும் கனிந்த பாமழைத் திரளும் மிகுந்து எப்போதும் வான மழைத் திரளும் மெலியும்படியாக வானுலகுங் குளிர மணந்தன என்பது. (சஅ)

மீமுறை யோப்ப நாடோறுங் குறையில்
வேதிய ரருச்சனை திருத்து
மாமுறை நலமும் வானொடு வையம்
மருளநல் லறநெறி வழங்கும்
யாமுறை யனைத்து மின்புறக் கண்டா
ரிமைப்பில தயர்வுறு மல்லாற்
பாமுறை நடத்தித் தொடைச்சரந் தொடுத்துப்
பகர்ந்தவை புகழ்வது பாலோ.

(க - ரை.) அருச்சனை முறையும் அறநெறி முறையும் கண்டவர் வியப்பதன்றிப் பாடலால் இயம்பும் பான்மையதோ.

(பொ - ரை.) வானுலக முறைமைக்குப் பொருந்த நாள்தோறும் குறையில்லாத வேதியர் அருச்சனை திருந்தச் செய்யும் பெருமை பொருந்திய முறைமையின் நலமும், வானுலகத்தாரோடு வையகத்தாரும் வியப்ப நல்லற நெறியை வழங்கும் எல்லா வகையுமாகிய அனைத்தையும் இன்புறக் கண்டவர் வியந்து கண்ணிமைக்காமல் அயர்வ தன்றிப் பாடல் முறையாகப் பாமாலை தொடுத்து நடத்தி முன் கூறியவற்றைப் புகழ்வது முறையோ? (சகூ)

உலகெலாம் வணங்கும் பொதுவறத் தனிக்கோ
லோச்சிய விறைவனை வணங்க
வலகெலாங் கடந்து பழுதறப் பயந்த
வறநெறி யருமையா லுவமை
விலகெலா நயங்க டாங்கிய குடிகள்
விழைவொடு வதிந்தன தன்மைத்
திலகெலா நகரை நிலத்திடைப் பழிக்கு
மெருசலே மென்னுமா நகரம்.

(க - ரை.) பிறர்க்கும் உரிய பொதுமையறத் தனிச் செங்கோல் செலுத்திய இறைவனை வணங்கப் பழுதறப் பயந்த அறநெறியின் அருமையாலும், உவமை கடந்த குடிகள் விரும்பித் தங்கியமையாலும் உலகிலுள்ள பிறநகரை எருசலேம் நகரம் பழிக்கும்.

(பொ - ரை.) பிறர்க்கும் உரிய பொதுமையற ஒப்பற்ற தனிச் செங்கோல் நடாத்திவரும் உலகெலாம் வணங்கும் இறைவனை வணங்குவதற்காக அளவெலாங் கடந்து குற்றமறத் தோன்றிய அறநெறியை உடைய அருமையாலும், உவமையைக் கடந்த எல்லா நயங்களும் தாங்கிய குடிகள் விருப்பத்துடன் தங்கியிருக்கின்ற தன்மைத்து ஆதலாலும், இலங்குகின்ற எல்லா நகரங்களையும் இவ்வுலகத்தில் எருசலேம் என்னும் நகரம் பழிக்கின்றது. இறைவனை வணங்குதற்குரிய அரிய நெறியைத் தோற்றுவித்த பெருமையாலும், எல்லா நலங்களும் வாய்ந்த பெருங்குடி மக்கள் வாழ்ந்து வருவதாலும் ஏனைய நகரங்களிலும் எருசலேம் சிறந்து விளங்கியது. (௫0)

வேறு

இன்னரு நகரமை யெரிமணி யிழையி
னுன்னரு மெழினல முடைவன கவினர்
பன்னரு மறநெறி பழுதற வினிதாய்த்
துன்னரு நயனொடு துலைவன் பொழுதே.

(க - ரை.) அந்த எருசலேம் நகரத்து அழகுடையவர்க்கு அறநெறி தவறாத இனிமையோடும் புண்ணிய நயம் செய்த லோடும் பொழுது கழியும்.

(பொ - ரை.) இத்தன்மை வாய்ந்த அரிய எருசலேம் நகரத்து அமைந்த ஒளிவிடும் அணிகலன்போல் உன்னுதற் கரிய அழகுநலம் உள்ள பெருங் கவினுடையோர்க்குச் சொல்லுதற்கரிய அறநெறியின் வண்ணம் யாதொரு குற்றமுமின்றி இனிமையாய்க் கிட்டுதற்கரிய புண்ணியம் செய்தலொடு பொழுது கழியும்.

நயன் - புண்ணியம்; அது செய்தலொடு. (௬௧)

ஆடுவ ரமுதினொ டலர்மது விகலப்
பாடுவர் பொருணகு பயனமை கலைநூ
னாடுவர் நளிருற நறவுறு மலரைச்
சூடுவர் நயனொடு துலைவன் பொழுதே.

(க - ரை.) ஆடுதலும் பாடுதலும் கலை நுண்பொருள் நாடு தலும் நறுமலர் சூடுதலும் ஆகிய நன்னயத்தில் பொழுது கழியும்.

(பொ - ரை.) இன்பக் கூத்தாடுவர்; அமுதொடும் பூந்தேனொடும் இனிமை விஞ்சப் பாடுவர்; பொருள் நயந் தெரியும் பயனமைந்த கலை நூலை ஆராய்வர்; பெருமையுறத் தேனுறு நறுமலர் சூடுவர்; இத்தகைய நயத்தொடு பொழுது கழியும். (௬௨)

மருக்கொடு மிளிரலர் மருவிய முடிசூழ்ந்
தருக்கொடு மிளிருவ ரேரியொடு மணநீர்
திருக்கொடு மிளிரின தெருவிடை யெறியப்
பெருக்கொடு மிளிர்நகர் பெயர்வன பொழுதே.

(க - ரை.) நறுமண மலர்சூடி விளங்கும் மங்கையர் ஒளியும் மணமும் உள்ள பன்னீரைத் தெருக்களிலிறைக்க, அது பெருக் கெடுத்தோடி விளங்க அதுவும் பொழுதுபோக்காகும்.

(பொ - ரை.) நறுமணத்தோடு விளங்குகின்ற மலர் களைச் சடையாகப் பொருந்திய முடியில் அணிந்து வடிவு கொண்டு விளங்குகின்ற மகளிர் நிறமுள்ள பனிநீரைச் செல்வங் கொண்டு விளங்குகின்ற தெருக்களிலே இறைக்க அதனாலாகிய வெள்ளத்தோடு விளங்குகின்ற நகரில் பொழுதுகளும் இவ்வகை விளையாட்டில் பெயர்வன வாயின. (௰௩)

இந்திணை யிதழவி ழிளமது மலராற்
பந்தினை வனைகுவர் படிகுவ ரெறிவார்
வந்தினை யெதிர்குவர் மறைகுவர் நகுவார்
சிந்தனை நயனொடு செலுமொரு பொழுதே.

(க - ரை.) நிலவுபோல் மலர்ந்த மலரால் மலர்ப்பந்து செய்குவர்; விளையாட்டிற் கலந்து எறிந்தும் எதிர்த்தும் மறைந் தும் சிரித்தும் இத்தகைய சிந்தனையில் பொழுதுபோக்குவர்.

(பொ - ரை.) நிலாவினை ஒத்த இதழ் விரிந்த தேன் பொருந்திய இளமலரால் மங்கையர் மலர்ப்பந்து செய்குவர்; பந்தாடலில் மூழ்கி எறிகுவர்; ஓடி வந்து தம் இணையை எதிர்ப்பர்; மறைகுவர்; சிரிப்பர்; இத்தகைய சிந்தனை நயத் தொடும் ஒருவகைப் பொழுது கழியும் என்க. (௰௪)

மீன்மலை மெலிதர மிளிரற வினையோர்
பான்மலை மெலிதர விசையொடு பகல்போய்
நூன்மலை மெலிதர நுணியுணர் விரவாய்
வான்மலை மெலிதர வருமிரு பொழுதே.

(க - ரை.) பாலினும் இனிய இசைப் பாடலிற் பகல்போம்; நூல்மலைவு தீர நுண்ணிதாய் ஆராய்தலில் இரவுபோம்.

(பொ - ரை.) விண்மீன்களும் உவமையாகாது தளர மிளிரும் அறவினை செய்வோர், பாலும் உவமையில் தளரும் படியாக இசைப் பாடல் பாடுதலொடு பகற்பொழுது போம்;

நூற்பொருள் மயக்கம் நீங்க நுட்பமாக வுணர்ந்து ஆராய்த லினுல் இரவுப்பொழுது போம்; இங்ஙனம் வானத்து உவமையாகிய மீன்களும் பகலும் மெலியும்படியாய் வருமிரு பொழுதும் போம் என்க. (ருரு)

எழுதினி துருவென வெழினல ரிழிவார்
வழுதினி தினிதல வழுவில விறையோன்
றெழுதினி தறநெறி துறுவன நயனுற்
பொழுதினி திரிவன பொருவில நகரே.

(க - ரை.) ஓவியம் போன்ற எழில் நல்லார் பொய்யின்பம் இன்பமன்று; இறைவனைத் தொழுது இனிதாக அறநெறியில் நிற்கும் இன்பமே இன்பமென்று அத்தகைய நயத்தை மேற் கொள்ளுதலினுல் பொழுதுபோம்.

(பொ - ரை.) ஒப்பில்லாத அந்நகரில், எழுதப்பட்ட இனிய உருவம் போல எழில் கொண்ட நங்கையர், இழிவு ஆர்ந்த வழுவான நெறியால் வரும் பொய்யின்பம் இன்பம் அன்று என்று இறையோனைத் தொழுது இனிதாக அறநெறியில் பொருந்துகின்ற நயத்தினுல் வரும் இன்பத் தினுல் அவர்கட்குப் பொழுதுகள் கழிவனவாகும். (ருசு)

பொறையினை நகுவன புயமலி பொருன
ருறையினை நகுவன வுதவிய கொடையோர்
துறையினை நகுவன துறுவிய கலையோர்
தறையினை நகுவன தடமலி நகரே.

(க - ரை.) மலையை வென்ற புயங்கள்; மழையை வென்ற கொடைகள்; துறையைவென்ற கலைகள்; உவமைவென்ற நகரம்.

(பொ - ரை.) வீரரின் பருத்த தோள்கள் மலையின் ஒப்பைப் பழிப்பன; கொடையோர் வழங்கும் கொடை கள் மழை ஒப்பினை இகழ்வன; கலைஞரின் நிறைந்த கலைகள் பிற துறைகளின் ஒப்புக்களையெல்லாம் சிரிப்பனவாகும்; பெருமையுள்ள அந்நகரத்தின் உயர்வுகள் உலகிலுள்ள பிற உவமைகளையெல்லாம் நகுவனவாம் (ருஎ)

அலையினோ டிகல்வன வரிதோலி நியமம்
விலையினோ டிகல்வன விரியணி மணிகள்
கலையினோ டிகல்வன கடையில நயமோர்
வலையினோ டிகல்வன மலிதிரு நகரம்.

(க - ரை.) கடைத் தெருவின் ஒலிகள் கடல் ஒலிக்குமேல் எழுந்தன ; அழகிய மணிகள் விலையினோடு இகலி மேம்பட்டன; கலையின்பத்தோடு இகலி மேம்பட்டன முடிவிலாத வாழ்வின் இன்பங்கள் ; மனத்தைப் பிணித்தலின் அந்நகரம் வலையினோடு இகலி மேம்பட்டது.

(பொ - ரை.) அரிய முழக்கமுள்ள கடைவீதிகள் கடல் அலைகளோடு மாறுபட்டு முழங்கின; பெரிய அரிய மணிக்குவைகள் விலையாகத் தரும் பொருள்களோடு மாறுபட்டு விஞ்சின; முடிவில்லாத வாழ்க்கை இன்ப நயங்கள் கலைகளோடு இகலி மேம்பட்டன; செல்வம் மலிந்த அந் நகரத்தின் கவர்ச்சிகள் மக்கள் மனத்தைக் கவர்தலினால் வலையினோடு இகலி மேம்பட்டன. (௩௮)

வளையொலி வளைவுடை வயிரொலி வளர்பாக்
கிளையொலி யிசையொலி குழலொலி கிளர்பற்
றுளையொலி கலமொலி துறுவலொ டினிதாய்
விளையொலி யலையொலி மெலிதர மிகுமால்.

(க - ரை.) சங்கு ஊதுகொம்பு பாடல் வீணை இசை குழல், பலதுளை வாத்தியம் யாழ் இவற்றின் ஒலி கடலொலி மெலிய மிக்கது.

(பொ - ரை.) சங்கின் ஒலியும் வளைவுள்ள ஊது கொம்பின் ஒலியும் வளர்ந்த பாடலின் ஒலியும் வீணையி னொலியும் இசையினொலியும் குழலினொலியும் மிகுந்த பல துளையுள்ள வாத்தியங்களின் ஒலியும் யாழினொலியும் மிகு தலினால் இனிமையாய் விளைகின்ற ஒலிகள் கடலின் அலை யொலியும் மெலியும்படியாக மிகும் என்பது.

கிளை - வீணை. கலம் - யாழ். துறுவல் - மிகுதல். (௩௯)

கோடியோடு குடையுற விறையவர் குழுவி
னடியோடு மடியுற விரிவன வணிகம்
பொடியோடு மிருளுற நெரிவன பொருடேர்
முடியோடு முகிலுற முயல்வன நகரம்.

(க - ரை.) கொடியும் குடையும் அரசர்களின் அடியும் அடியும் நெருங்கப் படைகளின் பரப்பிலெழுந்த புழுதியும் மண்ட இருள் மிக்கது. தேர்முடி முகிலொடு மோதிற்று; இங்ஙனம் முயற்சி மிக்கது அந்நகரம்.

(பொ - ரை.) கொடியொடு குடைநெருங்க அரசர் கூட்டங்களின் அடியொடு அடிநெருங்கப் பரவிச் செல்கின்றனவாகிய சேனை தளங்களினால் எழுகின்ற பொடியினோடும் இருள்மிகப் பொற்றேரின் முடிகள் முகிலொடுஞ் சென்றுகெழும நால்வகைப் படைகளும் முயல்வனவாகும் அந்நகரின்கண் என்பது. (௬0)

வேறு

கோடாதன வுயர்கோலொடு குளிர்மா றிலகுடையும்
வாடாதன தனிவாகையு மதமா றிலகளிறு
மோடாதன வடற்றானையு முளகோனொடு நகரம்
வீடாதன நெறிமாணுற மெலியா நலமுளதால்.

(க - ரை.) கோடாத செங்கோல்; குளிர் மாறாத குடை; வாடாத வெற்றிவாகை; மதம் மாறாத களிறு; ஓடாத சேனை; இவையுள்ள அரசனின் அழியாத நெறிப் பெருமையால் தளராத நலமுண்டு.

(பொ - ரை.) வளையாத உயர்ந்த செங்கோலும், குளிர்மாறாத வெண்கொற்றக் குடையும், வாடாத ஒப்பற்ற வெற்றிவாகை சூடுதலும், மதம் மாறாத களிறும், ஓடாத வலிய சேனையும் உள்ள அரசனோடு கெடாத நன்னெறியின் மாண்பும் அடைதலால் அந்நகரம் மெலியாத நலமுளதாயிற்று. கோலும் குடையும் வாகையும் களிறும் சேனையும் உடைய கோனொடு நன்னெறியும் பொருந்தியிருத்தலால் நகரம் மெலிவுறாது விளங்குவதாயிற்று. (௬௧)

சாலன்போடு நிறைதாய்முலை தழுவுஞ்சிறு குழவி
போலன்போடு நகராள்பவ னருளின்றயை புரிசெங்
கோலன்போடு தழுவுங்குடி குறையோன் றிலநகரின்
பாலன்போடு தனிவாழ்வோடு படுநன் றியதளவோ.

(க. - ரை.) தாய்முலை தழுவிய குழவிபோல அருள்மிக்க அரசனின் செங்கோலைக் குடிகள் தழுவி நிற்கக் குறையில்லாத அந்நகரின் ஒப்பற்ற வாழ்வொடு உண்டாகிய நன்மைக்கு அளவும் உண்டோ?

(பொ - ரை.) மிகுந்த அன்பினுல் நிறைந்த தாயின் முலையைத் தழுவும் சிறு குழந்தைபோல், அன்பொடும் அருளொடும் பரிவொடும் நகரை ஆட்சிபுரிகின்ற அரசனின் செங்கோலை, அன்புடன் தழுவுங் குடிகள் எல்லாம் குறைவு ஒன்றும் இல்லாத அந்நகரினிடத்து வாழ்கின்ற அன் பொடும் ஒப்பற்ற வாழ்வொடும் உண்டாகிய நன்மைகளுக்கு அளவும் உளவோ? (சுஉ)

இருந்தோடிய திருவிங்கணி லினிதன்புற விடலாற்
பருந்தோடுறு நிழலென்றுயர் பயனீன்றன வெனவே
மருந்தோடிக லரிதன்புள மலிகின்றன மரபோர்
விருந்தோடுண வருகின்றன ரிலையென்றுள மெலிவார்.

(க - ரை.) அறஞ் செய்யாச் செல்வம் அழியுமென்றும் அறஞ் செய்தலால் அது உயர்பயன் தருமென்றும் உணர்ந்தவர் விருந்து வரவில்லை என்று மனந்தளர்வர்.

(பொ - ரை.) அறஞ் செய்யாதிருந்து ஓடின செல்வங் கள்; ஆதலால் இங்கே இல்லிலிருந்து இனிதாகவும் அன் பாகவும் அறஞ் செய்தலால், பறக்கும் பருந்தைத் தொட ரும் நிழல்போல அந்த அறம் தன்னைத் தொடர்ந்து வந்து வீட்டுலக இன்பத்தைத் தரும் என்று உணர்ந்து இனிய மருந்தினேடும் ஒப்பரிதாகிய அன்பு உள்ளம் மலிந்த மரபினர் விருந்துண்ண வருகின்றவரில்லையேயென்று மனம் தளர்வார். (சுங)

தெள்வாருரை முகிலுங்கட றிரையுங்கெட முகியா
வள்வார்முர சதிர்மாநகர் வயின்வாழ்பவர் கொடையைக்
கொள்வாரில குறையல்லது குறையில்லது மேனவே
கள்வாரிலர் கடையாரிலர் கழிவாரிலர் நயவார் .

(க - ரை ) முரசு முழங்கும் அம்மாநகரில் கொள்வார் இல்லாத குறையன்றி வேறு குறையில்லை; கள்ளரும் கடையரும் தியரும் இல்லை.

(பொ - ரை ). தெளிந்த நீண்ட ஒலிக்கின்ற மேகமும் கடல் அலையும் தோற்க ஓயாமல் வளவிய வார்கட்டிய முரசு முழங்குகின்ற அம்மாநகரில் வாழ்பவர் கொடுக்கின்ற கொடையைக் கொள்பவர் இல்லாத குறையேயன்றிக் குறையும் இல்லை; அங்கே கள்வரும் இலர்; கயவரும் இலர்; பிறர்க்குப் பயன்படாது கழிவோரும் இலர்; களவு, கீழ்மை, பிறர்க்கு உதவாது ஒழிதல் என்னும் இவற்றை எவரும் என்றும் விரும்பார். (௬௪)

கோவீற்றுறை தனிநாதனைக் குறையாப்புக ழிடவும்
நாவீற்றுறை கலையாயவு நறுமாணறஞ் செயவும்
பாவீற்றுறை யிசைபாடவும் பதமாடவும் படரும்
பூவீற்றுறை நகராங்கிரு பொழுதாயின வினிதால்.

(க - ரை.) இறைவனைப் போற்றவும் கலைகளை ஆராயவும் அறஞ் செய்யவும் இசை பாடவும் நடனம் ஆடவும் பொழுது இனிது போகும் என்பது.

(பொ - ரை.) வானுலகில் வீற்றிருக்கும் ஒப்பற்ற இறைவனைக் குறையாத புகழ் கூறிப் போற்றவும், நாவில் வீற்றிருக்கும் கலைகளை ஆராயவும், தூய பெருமையுள்ள அறங்களைச் செய்யவும், பாடல்களிலே வீற்றிருக்கும் இசையைப் பாடவும், இசைப்பதங்களுக்கேற்ப நடனம் ஆடவும், பரந்த பூவுலகில் சிறப்பாக வீற்றிருக்கும் அந்நகரில் இரவும் பகலுமாகியபொழுது போகாநிற்கும் என்பது.

கோ - வானம். பூ - பூமி. (௬௫)

நீரல்லது மலையில்லது நிறைவான்பொரு ளிடுவார்
போரல்லது பகையில்லது புரிவான் மழைபொழியுங்
காரல்லது கறையில்லது கடிகாவலு மறனூற்
சீரல்லது சிறையில்லது திருமாநகரி டையே.

(க - ரை.) அந்நகர் தன்பால் நீரலையல்லது அலைதல் இல்லது; கொடுப்போர் வாங்குவோரை வற்புறுத்தும் போரல்லது பகைப்போரில்லது; மழை முகிலல்லது கறையு மில்லது; அறக்காவலன்றிச் சிறைக்காவலுமில்லது.

(பொ - ரை) அச் செல்வமாநகர் தன்னிடையே நீர்த் தடாகத்தில் அலை அலைதலல்லது மக்கள் துன்பத்தால் அலைதல் இல்லது; நிறைந்த சிறந்த பொருள்களை வழங்கு வோர் வாங்குவோரை வற்புறுத்தும் போரன்றிப் போர் செய்யும் பகையில்லது; நூற்புரிபோன்று வானிலிருந்து மழையைப் பொழியுங் கார்மேகத்தினிடம் உள்ள கறை யன்றி மக்கள் உள்ளத்தில் கறையாகிய கருப்பு இல்லது; அறத்தினுல் மிக்க சிறந்த காவல் அல்லது சிறைக்காவல் இல்லது. (சூ சூ)

மின்னூரினி திசைபாடலில் விளையின்பது பெரிதோ
பொன்னூர் குழல் புகரின்பது பெரிதோ கலைபுரிநூல்
சொன்னூரவ ருரையின்பது பெரிதோ பொழிதுளிக
ளன்னூர்நிறை கொடையாற்பொரு ளருளின்பது பெரிதோ.

(க - ரை.) மகளிரின் பாடலின்பம் பெரிதோ? வீணை யின்பம் பெரிதோ? கலைஞரின் நூல்நயத்தின்பம் பெரிதோ? அறத்தால் வரும் இன்பம் பெரிதோ?

(பொ-ரை.) மின்னல்போன்ற மகளிர் இனிதாக இசைக் கும் பாடலினுல் விளைகின்ற இன்பமாகிய அது பெரிதோ? பொன் பொருந்திய குழலாகிய வீணை புகலுகின்ற இசை இன்பமாகிய அது பெரிதோ? கலைகளை விளக்கும் நூற் பொருளை எடுத்துச் சொல்பவரது உரையின்பமாகிய அது பெரிதோ? மழைபோன்ற கையுடையவர் நிறைந்த கொடைத் தொழிலினுல் பொருளை வழங்குகின்றதனு லாகிய ஈத்துவக்கும் இன்பம் பெரிதோ? என்பது.

குழல் - ஈண்டு வீணை என்னும் பொருட்டு. புகர் - புகல் என்பதன் போலி. (சூஎ)

சிலையோத்தன நுதலார்மனச் சிறையோத்தன மதிள்கள்
கலையோத்தன வுயர்மாலைகள் கனமோத்தன கரிகள்
மலையோத்தன விரதந்திரள் வளியோத்தன பரிக
ளலையோத்தன கடைவீதிக ளலையோத்தன ரபையர்.

(க - ரை.) கற்புடை மகளிரின் மனக்காவல் போன்றது மதிற்காவல்; உயர்ந்த அரண்மனை மாளிகைகள் நிலாமண் டிலத்தை யளாவின; யானைகள் மேகம் போலும்; தேர்கள் மலைகள் போலும்; குதிரைகள் காற்றுப்போலும்; வீதிகள் கடல்போலும்; வீரர்களும் கடல்போலும்.

(பொ - ரை.) விற்களைப்போன்ற நெற்றிகளையுடைய மகளிரின் கற்புள்ள மனக்காவலையொத்த காவல் நலம் செய்தன மதில்கள்; அரசனின் உயர்ந்த அரண்மனை மாடங் கள் கலைநிரம்பிய திங்கள்மண்டிலத்தை யொத்தனவாய்த் தோன்றின; யானைகள் மேகத்தின் கூட்டங்களை யொத்தன; தேர்க்கூட்டங்கள் மலைக் கூட்டஙகளைப் போன்றன; குதிரைக் கூட்டங்கள் விரைவினால் காற்றை யொத்தன; கடைவீதிகள் ஓசை முழக்கத்தால் கடலை யொத்தன; வீரர் கூட்டங்களும் எண்ணிக்கையால் அலைகளை யொத்தனர் என்பது.

மாலைகள் - மாலை என்பது அரசனின் மனை; அது ஈண்டு ஆகுபெயராய் அரண்மனை மாடங்களைக் குறித்தது. கலை என்பது நிலவு. அலை - கடல். அலை - அலைகள். (சூஅ)

பாநாணுப விசையோதைகள் பகல்நாணுப மணிகள்
பூநாணுப மதுவாரருள் புயல்நாணுப கொடைகள்
நாநாணுப கலைமாட்சிமை நசைநாணுப நிறைசீர்
கோநாணுப நலம்யாவிலுங் குறையா வளர்நகரம்.

(க - ரை.) பண்ணிற்குப் பாவும் மணிகளுக்குப் பகலும் அருளுக்குத் தேனும் கொடைக்கு மேகமும் மாண்கலைக்கு நாவும் செல்வத்திற்கு விருப்பமும் மண்ணுலகிற்கு விண்ணுலகும் நாண யாவிலுங் குறைவின்றி வளர்ந்த நகர் அது.

(பொ - ரை.) பண்ணின் இசையோடுகூடிய ஓசைக்குப் பா நாணும்; மணிகளின் ஒளிகளுக்குப் பகலின் கதிர்கள் நாணும்; அருளுக்கு மலர்களிலிருந்து ஒழுகும் தேன் தாரைகள் நாணும்; கொடைகளுக்கு முகிற்குழாம் நாணும்; கலைகளின் மாட்சிமைகளை இயம்புவதற்கு நாவுகள் நாணும்; நிறைந்த சீருள்ள செல்வங்களை விரும்புவதற்கு அளவு படாமையின் விருப்பங்களும் நாணும்; யாவுங் குறையாமல் வளர்கின்ற அந்நகருக்கு எல்லா வகையிலும் வானுலகச் செல்வங்கள் நாணும். (சுகூ)

நளிர்பூவிடை மதுநேர்முக நவியேயிடை விழிநே
ரொளிர் பூணிடை மணிநேருட லுருவேயிடை யுயிர்நேர்
குளிர்நாடிடை புனனேரற வழியேயிடை குருநேர்
மிளிரூரிடை யரசாகையில் மிடைகோவியல் பகர்வாம்.

(க - ரை.) பூவில் தேன், முகத்தில் விழி, பூணில் மணி, உடலில் உயிர், நாட்டில் ஆறு, அறநெறியிற் குரு ஆகிய இவ்வுவமை போலும் ஊருக்கு அரசன்; ஆகையால் இனி அரசியல் கூறுவாம்.

(பொ - ரை.) குளிர்ந்த பூவிற்குத் தேன்போலவும், அழகிய முகத்திற்கு விழிபோலவும், ஒளிர்கின்ற அணிகலத்திற்கு மணிபோலவும், அழகிய உடலுக்கு உயிர்போலவும், குளிர்ந்த நாட்டிற்குப் புனலாறுபோலவும், அறநெறிக்குக் குருவருள் போலவும், விளங்குகின்ற ஊருக்கு அரசன் சிறந்தவனாகையால் நிறைந்த அரசியலை இனிக் கூறுவாம் என்பது.

நவி - அழகு. உரு உடலிடை உயிர்நேர் என்று கூட்டிப் பொருள் கொள்க. (எ0)

நகரப்படலம் முற்றிற்று.

---

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

[எண் : பக்கஎண்]

